# புதியது பிலிப்ஸ் தரும் போல் ரி:ப்ளெக்டார் லாம்ப்

அழகினை விளக்கிக்காட்ட, இதோ ஒளிமிக்க வழி!

பிலிப்ஸ் 'போல் ரி:ப்ளெக்டார் லாம்ப்' இதனுள்ளே உள்ள கண்ணாடி, கம்பி பிழைகளைத் திரைபோல் மறைத்து, கண்ணுக்கு மென்மையான, இதமான ஒளியை பிரதிபலிக்கிறது. உயர் ரக, தூய அலுமினியத்தினால் ஆன இந்தக் கண்ணாடி என்றுமே ஒளிமங்குவதில்லை. பாரபாலிக் ரி:ப்ளெக்டாருடன் (Parabolic reflector) இணைத்துப் பயன் படுத்தினால், இந்த லாம்ப், மிகச் செறிவான, வேண்டிய திசையில் ஒருங்கே பாயக்கூடிய ஒளியை தருகிறது. வண்ணச் சித்திரங்களையும், சிலைகளையும், அழகு மிளிர எடுத்துக் காட்டுகிறது. இன்னும் அற்புத பலன்களுக்கென, பல வண்ணங்களிலும் லூமினேர் வகைகள் கிடைக்கின்றன.

....அழகினைத் துலக்கிக் காட்டும் ஒளிவிளக்கு







சிக்கனமான இந்த இணைப்புகளை போல் ரி:ப்ளெக்டார் லாம்புடன் பயன் படுத்தலாம்.

PEL 5722

PHILIPS

அளவான மின்னலகில் அதிக ஒளிவெள்ளம்

பிலிப்ஸ்

# "சின்னச் சின்ன சலுகைகள் எமக்கு மாபெரும் உதவிகள்!"

(கல்கி ஊனமுற்றோர் நலன் இதழுக்காக சமூக நலத் துறை அமைச்சர் கோமதி சீனிவாசன் அவர்களை இந்த இதழ் ஆசிரியர் குழுவைச் சேர்ந்த திரு ராமகிருஷ்ணன், திரு வரதக்குட்டி ஆகியோர் பல்லாயிரக் கணக்கான உடல் ஊனமுற்றோர் சார்பில் சந்திக்கின்றனர். சந்திப்பு அமைச்சர் வீட்டில் நடக்கிறது. அன்புடன் அவர்களை வரவேற்ற அமைச்சர் அரசு, ஊனமுற்றவர்களுக்குச் செய்து வரும் உதவிகளை விளக்கியதுடன் இவர்கள் தெரிவித்த யோசனைகளையும் கவனமாகக் கேட்டு, காரியதரிசியைக் குறிப்பெடுத்துக்கொள்ளவும் சொன்னார்.)

ராமகிருஷ்ணன்: அரசு ஊனமுற்றவர்களுக்காகப் பல சலுகைகளைக் காண்பித்து வருவது உண்மையே. ஆனால் இது வரைக்கும் செய்த உதவிகள் போதும் என்று நினைக்கிறீர்களா?

அமைச்சர்: இன்னும் செய்யணும். பல புதிய திட்டங்கள் வகுத்திருக்கிறோம். பஸ்ஸில் இலவசமாகப் பயணம்செய்ய பாஸ் வழங்குதல், வேலை வாய்ப்புக்களில் அவர்களுக்கு மூன்று சதவீதம் இடங்களை ஒதுக்குவது. இரு கால் ஊனமடைந்தவர்களுக்கு மூன்று சக்கர சைக்கிள்கள் கொடுப்பது. ஒரு கால் ஊனமடைந்தவர்களுக்குச் செயற்கைக் கால் கொடுப்பது, காது கேளாதவர்களுக்குக் காது கேட்கும் கருவி அளிப்பது, தொழில் செய்ய தையல் மெஷின்கள் போன்றவை அளிப்பது என்று பல திட்டங்கள் உள்ளன. சமீபத்தில் முத்துக்காடு பகுதியில் உடல் ஊனமுற்றோர் தொழில் பயிற்சிக் கூடம் ஆரம்பித்துள்ளோம். நன்றாக இருப்பவர்களே கோரும் வசதிகளை அரசு செய்யும்போது ஊனமுற்றோர்களுக்காக மேலும் வசதிகள் செய்யத் தயங்குமா என்ன?

வரதக்குட்டி: பஸ்ஸில் இலவச பாஸ் என்று சொன்னீர்களே, இது சென்னை நகரில் மட்டுமா, அல்லது தமிழ் நாடு முழுவதுமா?

அமைச்சர்: ஊனமுற்றவர்கள் கட்டணமின்றி இலவசமாகப் பிரயாணம் செய்ய பாஸ் கொடுக்கும்படியும் இவர்களுக்கு வேலை வாய்ப்புக்களில் இடம் ஒதுக்கும் படியும் தமிழ்நாடு முழுவதும் உள்ள எல்லா அரசு பஸ் கார்ப்பரேஷன்களுக்கும் எழுதியுள்ளேன்.

வரத: அரசு அலுவலகங்களில் வேலை வாய்ப்பு அளிக்கும்போது சிறிது ஊனமானவர்களை எடுத்துக்கொண்டு மூன்று சதவீதக் கணக்கைக் காட்டிவிடுகிறார்கள். மிகவும் மோசமான அளவு ஊனமடைந்து ஆனால் நிரம்பப் படித்துள்ளவர்களுக்குத் தகுதிக்கேற்ற வேலை வாய்ப்பு இல்லையே?



அமைச்சர்: அவ்விதம் ரொம்பத் திறமைசாலியானவர்கள் மாதச் சம்பளத்துக்குத் தான் வேலை பார்க்க வேண்டுமென்பதில்லையே. வேலை கிடைக்காவிட்டால் சொந்தமாகத் தொழில் செய்யும் சாமர்த்தியம் இவர்களுக்கு உண்டு. அதற்குக் கடன் உதவி அளிக்கிறோம். சிறு வியாபாரத்தில் இறங்க விரும்புவோருக்குப் பெட்டிக் கடைகள் வைத்துக் கொடுக்கிறோம். நாற்பத்தைந்து வயதான ஊனமடைந்தவர்களுக்கு வேலை கிடைக்காமலிருந்தால் அரசு பென்ஷன் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறது.

மேலே : அமைச்சர்

கீழே : அமைச்சருடன் திரு ராமகிருஷ்ணன், திரு வரதக்குட்டி



வரத: பஸ்களில் உடல் ஊனமுற்றவர்களுக்குத் தனி இடம் ஒதுக்கினால் நல்லது. இப்படி ஒதுக்குவதன் மூலம் இவர்களை 'முன்னே போ, முன்னே போ' என்று விரட்டாமல் இருக்கலாம்.

அமை: இதைப் பற்றி யோசிக்கிறேன்.

ராம: பின்தங்கிய வகுப்பினரைத் திருமணம் செய்து கொள்கிறவர்களுக்கு அரசு தங்கப் பதக்கம் அளிக்க ஏற்பாடு செய்திருப்பதைப் போல் உடல் ஊனமுற்றவர்களைத் திருமணம் செய்து கொள்பவர்களுக்குத் தங்கப் பதக்கமும், வேலை வாய்ப்பும் அளிக்கலாமே?

அமை: உங்கள் யோசனையை வரவேற்கிறேன். வேலை வாய்ப்பு அளிப்பது என்பது புதியதொரு கருத்து. விதவைகளைத் திருமணம் செய்துகொள்பவர்களுக்குக் கூட நாங்கள் வேலை வாய்ப்பு அளிப்பதில்லை.

ராம: நீங்கள் வகுத்துள்ள திட்டங்கள் ஊனமுற்றோருக்குத் தெரியவில்லை. ஆந்திர அரசு செய்தது போல, தமிழக அரசு விளம்பரம் செய்யாததற்கு என்ன காரணம்?

அமை: நாங்கள் திட்டக் கமிஷனுக்கு எங்கள் பரிந்துரைகளை அனுப்பி யிருக்கிறோம். அவர்கள் ஒப்புதல் வந்ததும் திட்டங்களை விளம்பரப்படுத்துவோம்.

வரத: காவல் துறை அலுவலர்க்குக் குறைந்த விலையில் தேவையான பண்டங்களை அரசு கொடுக்க முன்வந்தது போல் எங்களுக்கும் ஏற்பாடு செய்யலாமே?

அமை: நல்ல யோசனை. ஆலோசித்து முடிவெடுக்கிறோம்.

ராம: எங்களைப் போன்றவர்களுக்கு வருமான வரி இலாகாவினர் சலுகை காட்டு



## வழுக்கை ஆராய்ச்சி!

"முன்புறம் வழுக்கையாக இருப்பவர்கள் தீவிரமாகச் சிந்திக்கக் கூடியவர்கள். பின்புறம் வழுக்கையாக இருப்பவர்கள் புத்திசாலிகள். தலை முழுவதும் வழுக்கையானவர்கள் தங்களைப் புத்திசாலி என்று நினைத்துக் கொள்பவர்கள்" என்கிறார் பாப்ஹோப். -ஸ்ரீ. நிபன்

கிருர்கள். மாநகராட்சி வசூலிக்கும் வேலை வரி (Professional tax) யிலிருந்து எங்களுக்கு விலக்கு அளித்தால் என்ன?

அமை: யோசிக்கலாம். ஆனால் ஓரளவுக்கு மேல் சலுகைகளைக் கோருவதும் அளிப்பதும் உங்கள் தன்மானத்துக்கு இழுக்கு என்று நீங்கள் எண்ணவில்லையா?

ராம: புதிய சலுகைகள் இருக்கட்டும். ஏற்கனவே தரப்படும் சலுகைக்கே வருகிறேன். கடந்த ஆண்டில் மத்திய அரசு எங்களுக்கு 25 லிட்டர் வரையில் ஆகும் பெட்ரோல் செலவுக்காக 50 சதவீதம் சலுகை அளித்துள்ளது. ஆனால் மத்திய அரசிடமிருந்து அதை வாங்குவதற்குள் அப்பப்பா என்ன கஷ்டம்! போதும்போதும் இந்தச் சலுகையே வேண்டாம் என்று தோன்றிவிட்டது. இந்த விஷயத்தில் தமிழக அரசு எங்களுக்கு உதவி செய்ய முன்வருமா?

அமை: ஆலோசித்து முடிவெடுக்கிறோம்.

ராம: அடுத்த பிரச்னை நாங்கள் ஓட்டும் வண்டிகளை நோ பார்க்கிங் அறிவிப்பு உள்ள இடங்களில் நிறுத்த எங்களுக்கு அனுமதியளிக்க வேண்டும். வண்டியை நிறுத்திவிட்டு மருந்து வாங்குவதற்குக் கிட்டத்தட்ட ஒரு பர்லாங் தூரம் ஊனமுற்ற கால்களால் நடக்க வேண்டியுள்ளது. எங்களுக்குச் சொந்த வண்டி இருந்தும் என்ன உபயோகம்?

அமை: ஆகட்டும் பார்க்கலாம்.

வரத: எங்களுக்காக எங்கள் பிரதிநிதி மேல் சபையிலோ அல்லது கீழ் சபையிலோ எங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு இடம் பெற்றால் எங்கள் பிரச்னைகளை அரசின் கவனத்துக்கு அவரால் கொண்டு வர முடியும். உங்கள் கருத்து என்ன?

அமைச்சர்: உடல் ஊனமுற்ற பிரபாகர் இருக்கிறாரே! ஊனமுற்றவர்கள் மட்டுமின்றி வில்லிவாக்கம் தொகுதி மக்களில் பெரும்பான்மையினர் அவரைத் தேர்ந்தெடுத்து அனுப்பியிருக்கிறார்களே! மேலும் நம் முதலமைச்சர் உங்களிடத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டவர், உங்களைப் போன்றவர்களுக்காக இவ்வருடம் மூன்று சக்கர சைக்கிள், தையல் மிஷின் போன்றவை இலவசமாக வழங்க இருக்கிறோம்.

(அமைச்சர் இருவரையும் வழியனுப்பி வைக்க வாசல்வரை வருகிறார். அவர்கள் கால்களை இயக்க முடியாவிடினும் கைகளினாலேயே வாகனங்களை ஓட்டிச் செல்வதைப் பார்த்து வியந்துவாழ்த்துகிறார்.)

உரையாடல் தொகுப்பு, படங்கள்: "சிக்கி"



# "உரிமைக்குக் குரல் கொடுங்கள்; உதவிக்குக் கை கொடுக்கிறோம்!"

உலகெங்கும் 1981 - உடல் ஊனமுற்றோர் நலன் ஆண்டாகக் கொண்டாடப்படுகிறது.

'உங்கள் ஸ்தாபனங்களில் உடல் ஊனமுற்றோருக்கு எந்த விதச் சலுகைகள் அளித்து வருகிறீர்கள்?' என்று சில அரசுத் துறை நிறுவனங்களின் அதிகாரிகளைச் சந்தித்துக் கேட்டபோது :




## பல்லவன் போக்குவரத்துக் கழகம் (மெட்ரோ)

"உடல் ஊனமுற்றோருக்கு இந்த ஆண்டு வேலை வாய்ப்பு விஷயத்தில் முன் எப்போதையும் விட அதிக அக்கறை காட்ட வேண்டும் என்று ஒரு தனி அறிக்கை மாநில சமூக நலத் துறை அமைச்சரிடமிருந்து வந்திருப்பதாகத் தெரிவித்தார், மனிதாபிமானம் மிக்க சீஃப் பெர்சனல் ஆபீசர் திரு டி. ரங்கநாதன்.

"உடல் ஊனமுற்றோர் 84 பேர்களுக்குப் பல்லவன் போக்குவரத்துக் கழகம் வேலை வாய்ப்பு அளித்திருக்கிறது. 77 ஆம் ஆண்டில் அதிகபட்சமாக உடல் ஊனமுற்றோரை வேலைக்கு நியமித்ததற்காக, ஜனாதிபதி சஞ்சீவ ரெட்டியிடமிருந்து பாராட்டுப் பெற்றது இந்த ஸ்தாபனம்" என்றார். குரோம்பேட்டை தொழிற் பட்டறையில் வண்ணம் பூசுபவராகப் பணி புரியும் திரு எம். பத்மநாபன் (எண் 981) உடல் ஊனமுற்ற தொழிலாளர்களில் 'மிகவும் திறமை வாய்ந்தவர்' என்று தேர்ந்தெடுக்கப்பட்டு, நற்சான்றிதழும் பரிசும் பெற்றதைப் பெருமையுடன் குறிப்பிட்டார் இவர்.

சரி, பேருந்துக் கட்டணத்தில் உடல் ஊனமுற்றோருக்குச் சலுகைகள் எப்படி?

பொதுமக்கள் தொடர்பு அதிகாரி திரு பி. வரதராசன் பதிலளித்தார்:

"உடல் ஊனமுற்றவர் தம் வீட்டிலிருந்து மருத்துவ மனை சென்று வர இலவச பாஸ் வழங்குகிறோம். ஒவ்வொரு மாதமும் மருத்துவர் வழங்கும் சான்றிதழ் இதற்குப் போதுமானது. இதுபோல் உடல் ஊனமுற்ற பள்ளி மாணவர் என்றால் அவர் வீட்டிலிருந்து பள்ளி சென்று திரும்ப இலவச பாஸ் வழங்குகிறோம். இரண்டு விழிகளுமிழந்த பார்வையற்றோருக்குச் சென்னை நகரின் எந்த பஸ்ஸிலும் இலவசமாகப் பயணம் செய்ய அனுமதியளித்திருக்கிறோம், கண் வைத்தியரின் சான்றிதழின் அடிப்படையில்."

## அஞ்சல் துறை டைரக்டர் திரு தே. பார்த்தசாரதி

● "சென்ற வருடமே பிரதம மந்திரியிடமிருந்து ஓர் அறிக்கை வந்தது: இந்த ஆண்டு உடல் ஊனமுற்றோருக்கு வேலை வாய்ப்பு விஷயத்தில் போதிய பங்கு கொடுக்க வேண்டுமென்று. தபால் துறையில் சி. டி. பிரிவு வேலைகளில் மூன்று சதவீதம் ஒதுக்க வேண்டும் என்று தபால்-தந்தித் துறை முடிவெடுத்தது.



✻ தே. பார்த்தசாரதி

"ரொம்பக் கெடுபிடி இல்லாமல், இந்த மூன்று சதவீத நியமனம் தமிழ் நாட்டு அஞ்சல் துறையைப் பொறுத்தவரை நியாயமாகவும் நிச்சயமாகவும் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது என்பதை இந்த நியமனக் கமிட்டியின் சேர்மன் என்ற முறையில் நான் பெருமையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

"சர்வதேச உடல் ஊனமுற்றோர் நலன் ஆண்டை யொட்டி, இந்திய தபால்-தந்தித் துறை அதன் ஊழியர்களின் உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்கு மொத்தமாக 100 ஸ்காலர்ஷிப் வழங்க இருக்கிறது. மாதம் 20 ரூபாய் வீதம் நாலைந்து வருஷங்களுக்கு டெக்னிகல் அல்லது சாதாரணப் படிப்புக்கு இது அளிக்கப்படும். இது தவிர போக்குவரத்துச் செலவுக்காக நடக்க இயலாத குழந்தைகளுக்கு மாதம் 20 ரூபாய் வழங்கப்படும்.



**தென்னிந்திய ரயில்வேயில் சீஃப் கமர்ஷியல் சூபரின்டென்டென்ட் திரு எம். ராமசுவாமி:**


✖ எம். ராமசுவாமி

● டிக்கெட் சம்பந்தப்பட்ட வரையில் சலுகைகள் என்னென்ன?

''கண் பார்வையற்றோர் தமக்கு உதவியாக ஒரு நபரையும் கூட அழைத்துச்செல்ல அனுமதிக்கிறோம். கண் பார்வை இழந்தவர் மாத்திரம் டிக்கட் வாங்கினால் போதும். உதவியாக உடன் வரும் நபருக்கு டிக்கட் ஏதும் கிடையாது. இது எந்த வகுப்பில் பிரயாணம் செய்தாலும் அளிக்கப்படும் சலுகை. ஐந்து அல்லது அதற்குக் குறைந்த வயதுடைய விழியிழந்த பிரயாணியானால், உதவியாக வருகிறவர் 50 சதவீத டிக்கட் தொகை கொடுத்தால் போதும். கண் பார்வையற்றவர் உதவியாளர் இன்றித் தனியாகப் பிரயாணம் செய்வதானால் 25 சதவீத டிக்கெட் தொகை கொடுத்தால் போதுமானது.

உடல் ஊனமுற்றவருக்கு முதல் வகுப்பு டிக்கெட்டின் அடிப்படைத் தொகையில் 15 சத விதச் சலுகை தருகிறோம். அவருடன் வரும் உதவியாளருக்கும் இந்தச் சலுகை உண்டு. இரண்டாம் வகுப்பானால் உடல் ஊனமுற்றவர் மட்டுமே டிக்கட் வாங்கினால் போதுமானது. உதவியாளர் உடன் வர இலவச அனுமதி அளிக்கிறோம்.

ஐந்து வயதுக்குக் குறைவான உடல் ஊனமுற்ற குழந்தை, முதல் வகுப்பில் பிரயாணம் செய்யவும், 15 சதவீதச் சலுகை தருகிறோம். இரண்டாம் வகுப்பானால் 50 சதவீதச் சலுகை தருகிறோம்.''

இவை எப்போது முதல் அமலுக்கு வந்திருக்கின்றன?

''1977லிருந்து. மேலும் முன்கூட்டியே தெரிவிப்பதானால், ரிசர்வேஷன் விஷயத்தில் தேவையான கவனம் செலுத்துகிறோம், இந்த வகைப் பிரயாணிகளுக்கு. ஸ்டேஷன் சூபரென்டென்டென்ட் அல்லது ஸ்டேஷன் மாஸ்டர் இந்தச் சலுகை டிக்கட்டுகள் கொடுக்க அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறார்.''

வேலை வாய்ப்பு விஷயத்தில் உங்கள் சலுகைகள் என்னென்ன?

''துவக்கத்தில் மூன்று சதவீதம் சி, டி. பிரிவுகளில் இவர்களுக்காக ஒதுக்கப்பட்டிருந்தாலும், ரயில்வேயில் இதைப் பதினைந்து சதவீதமாக உயர்த்தியிருக்கிறோம். ஏன், நியமனம் என்று வருகிறபொழுது, அதற்கு மேலேயே கொடுத்திருக்கிறோம். 97 காலி இடங்களுக்கு 54 எழுத்தர்களையும் (53 சதவீதம்) 3 காலி இடங்களுக்கு 3 டைப்பிஸ்ட்களையும் (100 சதவீதம்) 20க்கு 18 அக்கவுண்ட்ஸ் கிளார்க்குகளையும் (90 சதவிகிதம்) நியமித்திருக்கிறோம் செப்டம்பர் 80 வரை. ஆக, பார்க்கப் போனால், இது 15 சதவீதத்துக்கும் அதிகம். இது போலவே டி பிரிவு ஊழியர்களிலும், 15 சதவீதப்படி 10 பேர் நியமிக்க வேண்டியிருந்தால், 13 பேரை நியமித்திருக்கிறோம். உயர் மட்டத்தில் இதனைப் பரிசீலனை செய்து அவ்வப்போது ரயில்வே போர்டுக்கும், மத்திய ரயில்வே மற்றும் தொழிலாளர் நல— சமூக நல அமைச்சருக்கும் இந்தத் தகவல்களை அனுப்புகிறோம். முக்கியமாக, பிரதம மந்திரி இந்த விஷயத்தில் தனி அக்கறை கொண்டு அவ்வப்போது இது சம்பந்தமாக நாங்கள் அனுப்பும் விவரங்களை நேரிடையாகப் பார்வையிடுகிறார் என்பது, எங்களைக் கவனமாக இருக்கச் செய்வதோடு இத்தனை முக்கியத்துவம் தருவது எங்களுக்குப் பெருமையளிக்கிறது.''



நியமன சமயத்தில் காண்பிக்கும் சலுகைகளையும் சொல்லுங்களேன்?

● ''உடல் ஊனமுற்ற ஊழியருக்கு அடிப்படைச் சம்பளத்தில் பத்து சதவீதம் கன்வேயன்ஸ் அலவன்ஸ் (அதிகப் பட்சம் 50 ரூபாய்) தருகிறோம்.

● வயது உச்ச வரம்பில் சலுகை காண்பிக்கிறோம். உதாரணமாக, உச்ச வரம்பு 25 வயதென்றால் இவர்கள் விஷயத்தில் 35 ஆக உயர்த்துகிறோம். அதாவது பத்து வருடச் சலுகை தருகிறோம் வயது விஷயத்தில். ஷெட்யூல்ட் வகுப்பு அல்லதுபழங்குடியினரானால் இன்னொரு 5 வருடம் கூடத் தளர்த்துகிறோம்.

● எழுத்தர்களுக்கான நியமனத்தில் தட்டெழுத்து அறிந்திருக்கத்தான் வேண்டும் என்ற நியதியிலிருந்து விலக்களிக்கிறோம்.

● குறிப்பிட்ட வேலைக்கு ஏற்றவராக இருக்கிறாரா என்று மட்டுமே பேட்டியின்போது எங்கள் மருத்துவ அதிகாரி பார்க்கிறார். குறைகளைப் பெரிதுபடுத்துவதில்லை.

● ஊழியர்களின் குழந்தைகள் உடல் ஊனமுற்றவரா யிருந்தால், அவர்கள் தொழிற்பயிற்சியிலவும் ஆங்காங்கே வொகேஷனல் சென்டர்கள் வைத்திருக்கிறோம். அந்தக் குழந்தைகளுக்கு மருத்துவ வசதியும் அளிக்கிறோம்.

✖ எம். பத்மநாபன்


● சென்னையில் 12 பேரும், பெங்களூரில் 4 பேருமாக ரயில்வே உணவு விடுதிகளில் காது கேளாத — வாய் பேசாத பெண்களை

நியமித்திருக்கிறோம். ஆரம்பத்தில் இவர்களுக்குக் கமிஷன் மட்டுமே கொடுத்தாலும் போகப் போக இவர்கள் ரயில்வே ஊழியராக எடுத்துக் கொள்ளப் படுகிறார்கள்.

- இந்தச் சலுகைகள் இப்போது மட்டுமல்ல. தொடர்ந்து அளிக்கப்பட்டு வருடாவை."



டெலிபோன் இலாகா:

உடல் ஊனமுற்றோருக்காகப், பப்ளிக் டெலிபோன் ஆபீசுகள் இன்னும் கூடுதலாகத் திறக்கப்படும் என்று ஜனவரி மாதம் 11ம் தேதியிட்ட புதுதில்லி செய்தி கூறியது.

17ம் தேதியன்றே, சென்னை அண்ணா சாலையில் போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் அலுவலகத்துக்கு எதிரே ஒரு மேசையில் டெலிபோனும் டைரக்டரியுமாக உற்சாகமாகக் காணப்பட்டார் இருபத்தோரு வயதான இளைஞர் திரு ஜெ. கிருஷ்ணமூர்த்தி. எஸ். எஸ். எல். ஸி. தேறியிருக்கிறார். வேலை வாய்ப்பு அலுவலகத்தின் உடல் ஊனமுற்றோர் பிரிவு இவரை இந்த வேலைக்குச் சிபாரிசு செய்திருக்கிறது.

டெபாஸிட் தொகையாக ஐநூறு ரூபாய் டெலிபோன் இலாகாவுக்குக் கட்டினால் போதுமாம். பொதுமக்கள் கொடுக்கும் 50 பைசாவில், முப்பது பைசா இவர் டெலிபோன் இலாகாவுக்குக் கட்ட வேண்டும். ஆக, இந்த பப்ளிக் டெலிபோன் ஆபீசுகளை நிர்வகிக்கும் உடல் ஊனமுற்றவர், ஒரு டெலிபோன் காலுக்கு 20 பைசா பெறுகிறார்.

"இந்த ஒரு வாரத்தில் சராசரியாக நாள் ஒன்றுக்கு எத்தனை 'கால்'கள் செய்யப் பட்டன உங்கள் டெலிபோனிலிருந்து?"

"எழுபத்தைந்து!" என்கிறார் கிருஷ்ணமூர்த்தி.




வங்கி:

- ஸ்டேட் பாங்க், உடல் ஊனமுற்றவருக்கு என்ன கடன் வசதிகள் தருகிறது?

சீஃப் ஜெனரல் மானேஜரின் பிரதம காரியதரிசி திரு என். வேங்கடேசுவரர் சொன்னார்:

- அதிக கெடுபிடிகள் இல்லாமல் குறைந்த வட்டியில் கடன் அளிக்கிறோம்.
- ரூபாய் ஐயாயிரம் வரை தொழில் செய்வதற்கான நூறு சத வீதத் தொகையையும் கடனாக அளிக்கிறோம்.
- ஒவ்வொரு வருடமும் உடல் ஊனமுற்றோருக்காக இரு வார விழாக் கொண்டாடி, எல்லாக் கிளைகளுக்கும் இந்த வகையினருக்கான தொழில் முறை கடனுதவி புரியுமாறு தெரிவிக்கிறோம்.
- இவை தவிர செயற்கை உறுப்புக்கள் பொருத்திக் கொள்ளவும், மூன்று சக்கர வண்டிகள் வாங்கவும் கடன் வழங்குகிறோம்.
- 1977ம் ஆண்டு, ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி (R & D) நிதி ஒன்று நிறுவி, இதிலிருந்து உடல் ஊனமுற்றோருக்கு வேலை வாய்ப்புப் பயிற்சி அளிக்கும் முக்கிய ஸ்தாபனங்களுக்கு உதவித் தொகை தருகிறோம்.
- அதாவது, இந்த நிதியிலிருந்து அந்தந்த ஸ்தாபனங்களின் பெயரில் குறிப்பிட்ட தொகையை கிராண்ட் ஆக வைத்துக் கொண்டு, அதிலிருந்து வரும் வட்டித் தொகையை உடல் ஊனமுற்றோரின் மறு வாழ்வு நிலையங்கள், ஆந்திர மகிளா சபா, பஞ்சாபிகளின் போன்ற உன்னதமான நிறுவனங்களுக்கு அளித்து வருகிறோம்.




இன்கம்டாக்ஸ்:

- பொதுமக்கள் தொடர்பு அதிகாரி வருமான வரிச் சட்டத்தின்படி அளிக்கப்படும் சலுகைகளைச் சொல்கிறார்:

செக்ஷன் 80-Uவின் கீழ், பார்வையற்றோரும், உடல் ஊனமுற்றோரும் ஒரு குறிப்பிட்ட தொகையை வருமானத்தில் குறைத்துக் காட்ட அனுமதிக்கப்படுகிறார்கள். (சுற்றறிக்கை எண் 246).

கண் பார்வை யற்றவர் அல்லது உடல் ஊனமுற்றவரை வேலைக்கு வைத்துக்கொள்ளும் முதலாளிகளுக்கு அல்லது நிறுவனங்களுக்கு ஏதேனும் சலுகை உண்டா?

செக்ஷன் 36 (I) (IIa) கூறுகிறது:

கண் பார்வையற்ற அல்லது உடல் ஊனமுற்ற ஊழியருக்குக் கொடுக்கப்படும் சம்பளத்தின் 1 1/3 தொகை (100 ரூபாய் சம்பளம் என்றால் ரூ. 133.33)யை நிறுவனம் அல்லது முதலாளி வருமானத்தில் குறைத்துக் காட்டலாம். ஆனால் சம்பளம் (அலவன்ஸ், போனஸ், உட்பட) வருடத்தில் ரூ. 20,000க்கு மேற்படக் கூடாது.

பேட்டி: சாருகேசி

# ஏற்றுமதி செய்! அல்லது கைகட்டி நில்!

ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ள வி.டி. சுவாமி நிறுவனம் அண்மையில் தனது வெள்ளிவிழாவைக் கொண்டாடியது. இந்தியாவிலிருந்து ஏலம், லவங்கம், மிளகு போன்ற வாசனைதிகள் அன்றி வேறு எதுவும் ஏற்றுமதியாகாது என்று கருதப்பட்டுவந்த காலத்தில் புதிய சாதனைகளைச் செய்து காட்டிய வர்த்தக நிறுவனங்களுள் இதுவும் ஒன்று. முன்பு எந்த நாடுகளிலிருந்து எஃகு இறக்குமதி செய்தார்களோ அந்த நாடுகளுக்கே நமது தயாரிப்பான எஃகை ஏற்றுமதி செய்ததுடன், புதிதாக அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளிலும் மார்க்கெட் பிடித்தார்கள். எஃகு தண்டவாளங்கள், தகடுகள் மட்டுமின்றி மின் நிலையங்கள், எண்ணெய் சுத்திகரிப்பு ஆலைகள் போன்றவற்றுக்குத் தேவைப்படும் பிரும்மாண்டமான பாகங்களையும் இங்கே நுணுக்கமான ஆற்றலோடு தயாரித்து ஏற்றுமதி செய்தார்கள். பல்லாண்டுகளாக இருந்து வந்த மேல்நாட்டு ஏற்றுமதியாளர்களின் ஏகபோக்கியங்களை உடைத்து, முன்பின் தெரியாத இந்தியப் பொருள்களுக்கு – ரயில் வாகன்கள், டிராக்டர்கள் போன்ற பலவற்றுக்கு – அயல் தேசங்களில் மார்க்கெட்டை உருவாக்குவதென்றால் அதற்கு எத்தனை பாடுபட்டிருக்க வேண்டும்! வி. டி. சுவாமி நிறுவனம் மட்டும் இதுவரை 27 கோடி ரூபாய் அன்னியச் செலாவணி நமது தேசத்துக்குச் சம்பாதித்துத் தந்து சிறந்த ஏற்றுமதி நிறுவனம் என்ற பாராட்டை அரசிடம் பலமுறை பெற்றுள்ளது. இது போல் எத்தனையோ பல நிறுவனங்களின் ஒட்டுமொத்தமான முயற்சிதான் இந்தியா அரசியல் ரீதியில் மட்டுமின்றிப் பொருளாதார ரீதியிலும் சுதந்திரம் பெற்றுத் திகழ உதவும்.

நாம் இறக்குமதி செய்யும் அராபிய பெட்ரோலியத்தின் விலை நாளுக்கு நாள் அதிகரித்து வரும்போது நமது நாட்டின் ஏற்றுமதி வர்த்தகம் சூடு பிடித்து முன்னிலும் சிறப்பாக இயங்கவில்லை எனில் நமது அந்நியக் கடன்கள் பயங்கரமான அளவில் வளர்ந்து பொருளாதார ரீதியில் அடிமைப்பட்டுப் போவோம். இந்தியாவின் இன்றைய அந்நியச் செலாவணி நிலைமையோ கொஞ்சம் கூடத் திருப்திகரமாயில்லை. 1980–81ம் ஆண்டின் முதல் ஆறு மாதங்களிலேயே இந்தியாவின் அந்நியச் செலாவணி கணக்கு ரூ 2928 கோடி பற்றுக்குறையைக் காட்டுகிறது! அதாவது ஏற்றுமதியை விட இறக்குமதி ரூ 2928 கோடி அதிகம். இது சென்ற ஆண்டின் மொத்த பற்றுக்குறையான ரூ 2257 கோடியை விடவும் அதிகமாயிருப்பது கலக்கத்தை அளிக்கிறது.

நாட்டின் தேவைகளுக்கு ஏற்ப ஏற்றுமதி மளமளவென்று விரிவடையாமல் தேக்க நிலை காண்பதற்கு முக்கிய காரணம் அரசாங்கத்தின் அளவுக்கு மீறிய சட்டதிட்டங்களும் கட்டுப்பாடுகளுமே. இதனை வி. டி. எஸ். நிறுவனத்தின் வெள்ளி விழாவில் விரிவாக எடுத்துரைத்த சித்ரா நாராயணசுவாமி, ஜஸ்டிஸ் கஜேந்திர கட்கர் ஒரு முறை குறிப்பிட்டதைச் சொன்னார்: ''இத்தனை சட்டங்களைப் புதிது புதிதாக அரசு இயற்றிக்கொண்டே போகிறதே, அத்தனையையும் நீதிபதியாகிய நீங்கள் எப்படி நினைவு வைத்துக் கொள்கிறீர்கள்?'' என்று கேட்டதற்கு, கஜேந்திர கட்கர், ''அத்தனையையும் நினைவில் வைத்துக் கொள்வதாவது? பைத்தியம் தான் பிடிக்கும்! வழக்கு ஒன்று நீதி மன்றத்துக்கு வரும்போது அது தொடர்பான சட்டங்கள் என்ன என்று ஆராய்வோம், அவ்வளவுதான்'' என்றார். நீதிபதிகள் பாடு தேவலாம். இங்குள்ள தொழில் வர்த்தக அதிபர்கள் அவ்வளவு அதிர்ஷ்டக்காரர்கள் அல்ல! 'நின்றால் குற்றம்; அமர்ந்தால் குற்றம்' என்பதுபோல் உள்ள ஆயிரக்கணக்கான கட்டுப்பாடுகளையும் 'சட்டதிட்டங்களையும் சதா ஆராய்ந்து கொண்டு, தப்பு செய்து விடாமல் தங்களைக் காத்துக் கொள்வதிலேயே அவர்

1981 பிப்ரவரி 8
ரௌத்திரி தை 26
மலர் 39 : இதழ் : 28



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

களுக்குப் பெரும்பாலும் நேரம் போய் விடுகிறது. தொழில் வர்த்தக அபிவிருத்தியில் அவர்கள் எப்படி எந்த அளவுக்குக் கவனம் செலுத்த முடியும்?

அயல்நாட்டுத் தூதரகங்களில் உள்ள நமது வர்த்தகப் பிரதிநிதிகளோ ஏற்றுமதியாளருக்கு உதவுபடியாக இருப்பதில்லை. போதாக் குறைக்குத் தனியார் துறையினர் ஒரு பொருளுக்கு அயல்நாட்டு மார்க்கெட்டை உருவாக்கிய பின்னர், அதில் அரசு புகுந்து, தானே ஏற்றுமதி செய்வதாகக் கூறி, அதையும் உருப்படியாகச் செய்யாமல், ஏராளமான நஷ்டத்தை வரி செலுத்துவோருக்கு ஏற்படுத்துகிறது.

வி.டி. சுவாமி நிறுவனத்தின் வெள்ளிவிழா ஏதோ அந்த ஒரு நிறுவனத்தின் வெற்றி விழாவாக மட்டும் முடிந்து விடாமல் தேசம் முழுவதன் பொருளாதார மேம்பாட்டு விழாவாக மாறவேணுமானல் லாப நோக்கு என்பது அருவருப்பான விஷயமல்ல அவசியமான அம்சம் என்ற எண்ணம், அரசியல் தலைவர்கள், அதிகாரிகள், மக்கள் ஆகிய அனைவரிடமும் உருவாக வேண்டும்.

# விழிப்புணர்ச்சி பெறுவோம்!

**பா** கல்பூரில் முப்பத்து மூன்று விசாரணைக் கைதிகளின் கண்களைக் குத்திக் குருடாக்கி விட்டு அதில் "கங்கா ஜலம்" (அமிலம்) விடுகிறார்கள். புதுதில்லியில் பிரதமர் வீட்டுக்கு அருகிலேயே அந்தகர்கள் போலீஸாரின் தடியடிப் பிரயோகத்துக்கு ஆளாகிறார்கள். இந்த லட்சணத்தில் நமக்கு ஊனமுற்றோர் நலன் ஆண்டினைக் கொண்டாடுவதும் ஒரு கேடா? அதற்கு நமக்கு எங்கே அருகதை இருக்கிறது? என்று விரக்தியும் வேதனையுமுற்ற நிலையில் நான் இருந்தபோது இளைஞர் "சிக்கி" ராமச்சந்திரன் என்னிடம் வந்து, "ஸார்! இது ஊனமுற்றோர் நலன் ஆண்டு" என்று ஆரம்பித்தார்.

நான் கோபத்துடன் எழுந்துவிட்டேன்.

'நான் சொல்வதைச் சொல்லி விடுகிறேன். அப்புறம் உங்கள் பாடு' என்பது போல் சிக்கி என்னைக் கையமர்த்திவிட்டு, "ஊனமுற்றவர்களையே ஒரு சிறப்பிதழைத் தயாரிக்குமாறு கேட்டுக்கொள்வோமே" என்றார்.

என் கோபம் இருந்த இடம் தெரியாமல் பறந்துவிட, அவர் கரத்தைப் பற்றிக் குலுக்கினேன். "பேஷான யோசனை! உடனே அமல்படுத்தலாம்" என்றேன். வேறு எந்த நாட்டையும் விட நமது நாட்டில்தான் ஊனமுற்றோர் பற்றியும் அவர்கள் பிரச்னைகள், சாதனைகள் குறித்தும் எல்லோருக்கும் எடுத்துச் சொல்ல வேண்டியது அவசியம் என்று உணர்ந்தேன்.

திரு ராமகிருஷ்ணன், திரு சந்திரசேகரன், குமாரி ஷெரீன் பீட்டர்ஸ், திரு வரதகுட்டி ஆகியோரை இந்தச் சிறப்பிதழுக்குக் கௌரவ ஆசிரியர்களாக இருக்குமாறு வேண்டினோம். மகிழ்ச்சியோடு சம்மதமளித்த நால்வரும் ஒரு நாள் சந்தித்து நீண்ட நேரம் விவாதித்து, சில திட்டங்களை வகுத்தார்கள். அவற்றை ஒட்டு



சிக்கி ராமச்சந்திரன்

மொத்தமாய் அவர்களே நிறைவேற்றியும் விடுவார்கள் போலிருந்தது. எங்களுக்கு ஒரு வேலையும் இல்லாமல் போய்விடப் போகிறதே என்ற கவலை ஆட்கொள்ள, "உங்கள் சார்பில் இயங்கச் சில எழுத்தாளர்களுக்கும் இடம் கொடுங்கள்" என்று கேட்டுக் கொண்டோம். சம்மதித்தார்கள். சிக்கி, வாதூலன், சாருகேசி, சலன், சூடாமணி, எம். எஸ். பெருமாள், புகைப்படக்காரர்கள் சுந்தரம், உத்ரா முதலிய பலரின் ஒத்துழைப்புடன் இந்த இதழ் உருவாகியுள்ளது.

ஊனமுற்றோர் பற்றிய ஒரு விழிப்பு உணர்ச்சியை இந்த இதழ் நிச்சயம் நம்மிடையே ஏற்படுத்தும் என்று நம்புகிறேன். —ஆசிரியர்

---

அவள்: "டி.வி.யில் அறிவிப்பாளராக இருக்கிறவரைக் கல்யாணம் செய்துக்கிட்டு தப்பாப் போச்சு!"

இவள்: "ஏன்டி...?"

அவள்: "சாப்பாடு நல்லா இல்லேன்னு சாப்பிட இயலாமைக்கு வருந்துகிறேன்னு தட்டை நகர்த்தி வச்சுட்டு எழுந்து போயிடுறாரு!" - உ. ராஜாஜி





ராணுவ ஆட்சி
பாக் மக்கள்
இஸ்லாம் நாடுகளின் உச்சி மாநாட்டில் ஜியா பேச்சு!




கூட்டு சேரா நாடுகள் மாநாடு – புதுடில்லி
ஞாபகமா இருக்கட்டும் கர்சீப் கொடுங்க!
வார்த்தை ஜாலங்கள்




தகுதியைப் பார்த்து வேலை கொடுங்க!

# வஸந்த்! வஸந்த்!

சுஜாதா

## 6. ''ச்... ச்... ச்...''

''நாளை காலைல கிளம்பறதுக்குள்ள நீ ஒரு நடை பேராசிரியரைப் பார்த்துட்டு வந்துரு'' என்றான் கணேஷ்.

''இதோ இப்பவே'' — வஸந்த் பேராசிரியரைப் பார்ப்பதை விட அவர் மகள் தரிசனத்தில் ஆர்வம் உள்ளவன் போலத் தெரிந்தான். விசிலடித்துக் கொண்டே தலை வாரிக் கொண்டான். அதாவது கலைத்துக் கொண்டான்.

கணேஷ் அவனை சுவாரஸ்யமாகப் பார்த்து ''காதல்னு நடு ராத்திரில தலை வாரிப்பாங்கன்னு எனக்கு இன்னிக்குத்தான் தெரியும்'' என்றான்.

''இல்ல பாஸ். போறப்ப கொஞ்சம் பர்ஸனல்ட்டியா போலாமேன்னுட்டுத்தான்''

''போ. ஒழி. நடு ராத்திரிக்குள்ள திரும்பி வந்துரு.''

''திரும்பி வரப்ப குஷியா ஒரு 'காபரே' அருள்ல ஒரு பாப்பா துள்ளி விளையாடுதாம்.''

''ஏய், ஒழுங்கா வீடு வந்து சேரு.''

வஸந்த் பேராசிரியரின் வீட்டை அடைந்த போது பத்து மணி இருக்கும். வாயில் கதவின் பொத்தானைக் கொஞ்ச நேரம் அழுத்திய பின் உள்ளே பால் சோற்று விசுவாச பாமிரேனியன் வள் என்று ஒரு முறை சாஸ்திரத்துக்குக் குரைத்தது.

''யாரு?'' என்று ஒரு தூக்கக் குரல் கேட்டது.

''நான்தான் ஸார் வஸந்த்.''

''எந்த வஸந்த்?''

''என்னது, வட்டாரத்திலே ஏகப்பட்ட வஸந்த் இருக்காங்களா என்ன? கதவைத் திறங்க ஸார். உங்களுக்காக அடிபட்டு, கடிபட்டு வந்திருக்கேன்.''

''என்ன விஷயமா இருந்தாலும் காலைல பார்த்துக்கலாம். இப்ப கதவைத் திறக்கறதில்லை.'' இந்த முறை இனியாவின் குரல்.

''இனியா இது அநியாயம்'' என்றான்.

''காலைல பேசலாம் எல்லாம்.'' — இனியாவின் குரலில் ஏன் இந்த ஐஸ் என்று வஸந்துக்குப் புரியவில்லை.

''என்னை உள்ள கூட்டு வெச்சுக்கிட்டுத் திட்டக் கூடாதா?''

''கெட் அவுட் யு பாஸ்டர்ட்!'' என்று பேராசிரியர் வெடித்தார்.

''ஹார்ஷ் வர்ட்ஸ் ஸார். உங்களுக்காகத் திருகப்பட்ட கை இன்னும் வலிச்சுக்கிட்டிருக்கு.''

மௌனம். அப்புறம் பேச்சே இல்லை.

வஸந்துக்கு ஒரு சின்னச் சந்தேகம் ஏற்பட்டது. மெல்ல அந்த வீட்டைச் சுற்றிப் பின்புறம் குழாயடிக்கு வந்தான். துணி துவைக்கும் கல்லின் மேல் ஏறிப் பார்த்தான். உள்ளே சமையலறை தெரிந்தது. ஹால் வெளிச்சம் தெரிந்தது. வெளிச்சத்தில் மூன்று பேர் தெரிந்தார்கள். மூன்று பேர்?

மூன்றுமவன் முதுகு மட்டும் தெரிந்தது. இனியாவும், பேராசிரியரும் அந்த முதுகுக்கு உரியவனைச் சற்று அச்சத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''போய்ட்டானு பாரு'' என்று அதட்டினான்.



இனியா எதிர் ஜன்னலில் எட்டிப் பார்த்து, ''போயிட்டான்'' என்றாள்.

''நல்லா ஞாபகம் இருக்கும் இல்ல.''

''ம்ம் எல்லாம்—நல்லாத்தான் ஞாபகம் இருக்கு.''

''அப்ப நான் வரட்டுமா? குழந்தே அப்பா உடம்பைப் பார்த்துக்க. அநுவசியத்துக்கு அடிகிடி பட்டுறப் போறுரு.''

''எல்லாம் நான் பார்த்துக்கறேன். நீங்க கிளம்புங்க'' என்றாள் இனியா.

இப்போது அந்த மூன்றும் மனிதன் பக்க வாட்டில் தெரிந்தான்.

காலை அந்த ராமலிங்கம் கோஷ்டியில் பார்த்த முகமாக இருந்தது.

அவன் வாயிற் கதவைத் திறந்து வெளியே சென்று சற்றுத் தூரத்தில் மரத்தடியில் நிறுத்தி வைத்திருந்த மோபைக்கை உதைத்துப் புறப்பட்டான். வஸந்த் மறுபடி வாயிற் கதவுக்கு வந்து பெல் அழுத்தினான்.

''யாரு?''

''ஸார், மறுபடியும் வஸந்த்.''

''நீ இன்னும் போகலையா?''

''இப்ப கதவைத் திறக்கலாமில்ல?''

சற்று நேர யோசனைக்குப் பின் கதவு திறந்தது.

''ஏம்ப்பா உங்களுக்கெல்லாம் வேற விவஸ்தையே கிடையாதா?''

''பயப்படாதீங்க. கோவிச்சுக்காதீங்க.''

''வஸந்த் சட்டுனு உள்ள வந்துறுங்க'' என்றாள் இ.

''தட்ஸ் த கர்ள். உங்களுக்கு என் உதவி தேவை. ரைட்?''

வஸந்த் உள்ளே நுழைந்து ''உக்காரச் சொல்லாட்டாப் பரவாயில்லே. உக்காந்தே தீர்றேன்'' என்றான்.

''சொல்லுங்க. அந்த ஆளு என்ன பய முறுத்திட்டுப் போறான்?''

பேராசிரியர் தலையை அழுத்திப் பிடித்துக் கொண்டு சற்று நேர மௌனத்துக்குப் பிறகு



''சே, தெரியாத்தனமா வெட்டி வம்பில மாட்டிக்கிட்டாச்சு. ஸாரி வஸந்த். முதல்ல கொஞ்சம் ஹார்ஷா பேசிட்டேன். கட்டுரை கிடைச்சுதா? காலேல அங்க போயிருந்தியா?''

''கேக்காதீங்க. போனேன். அடி உதை வாபஸ் அவ்வளவுதான்.''

''அடடா'' என்றாள் இனியா.

''டாரு யூஸ் பண்ணாதே. வலிக்குது.''

''வஸந்த் கட்டுரை போனாப் போவுது விட்டுறு. விஷயம் ரொம்பத் தீவிரமாயிடும் போலிருக்கு. இப்ப வந்தானே அந்தாளு யார் தெரியுமா?''

''காலேலயு இவன்தான் ஸார் என் கண்டு விரலே மடக்கினான்.''

''அந்த ராஜ ராஜன் கிணத்தில என்னவோ இருக்கு. இப்ப வந்தவன் என்ன சொல்லிட்டுப் போனான் தெரியுமா? கொஞ்ச நாளில அவங்களே கட்டுரையைத் திருப்பிக் குடுப்பாங்களாம். அதுவரைக்கும் அதைப் பத்தி யார்கிட்டயும்மூச்சு விடக்கூடாதாம்.''

''விட்டா?''

''பளபளன்னு கத்தியைக் காமிச்சான், வஸந்த். அப்பா கழுத்துக் கிட்ட லேசாக் கீறிக் காட்டினான். எனக்கு ரொம்பப் பயமா இருக்கு வஸந்த். அவங்கள்ளாம் யாரு?'' என்றாள் இனியா. அவள் வதனத்தில் பய ரத்தம் பாய்ந்து இன்னும் சிவப்பாகி இருந்ததில் வஸந்தின் டயல்டாலிக் ஒரு பத்துப் பாயிண்ட் எகிறியிருந்தது. ''இனியா கொஞ்சம் அப்பால ஒத்தி நிந்துக்க. அப்பா கிட்ட சீரியஸாப் பேசணும். அய்யா உங்களாலே அந்த ரா. ரா. கிணத்தை அடையாளம் காட்ட முடியுமா?''

''ஏன் எதுக்கு?''

''பொடி நடையா அங்க போயிட்டு வந்துறலாம்னுட்டு பாஸ் யோசனை சொன்னார்.''

''வேண்டாம்ப்பா ஏதாவது விபரீதமாயிடும்.''

''நாங்க விபரீதத்திலேயே கை அலம்பற வங்க. நீங்க பயப்படாம சொல்லுங்க.''

''உக்கல் கிராமத்துல இருக்கு.''

''உக்கல் எக்கல்?''

''வட ஆர்க்காடு மாவட்டத்தில.''

''செங்கல்பட்டு மாவட்டமில்லேயா?''

''இல்லே.''

''அது எக்ஸாக்ட்டா எங்க இருக்குன்னு படம் வரைஞ்சு பாகங்களைக் குறிக்க முடியுமா உங்களால?''

''முடியும்.''

''முதல்ல அதைச் செய்யுங்க. அது வரைக்கும் உங்க டாட்டரை விசாரிக்கிறேன். என்ன இனியா கொஞ்சம் ஆடிப் பூட்டே போலிருக்கே? பயப்படாதே. இவங்கள்ளாம் கண்டைக்காய்ப் பசங்க.''

''அப்பா, அந்தக் கிணத்துல என்னதான் இருக்கு?''

''இல்லம்மா. எனக்குத் தெரிஞ்ச வரை அது வெறும் பாழுங் கிணறு. இவர்னு இவ்வளவு பேருக்கு அதில என்ன இன்ட்ரஸ்ட்டுனு புரியலே.''

''நீங்க அந்த இடத்தைப் பார்த்திருக்கீங்களா?''

''பாக்காம தீஸிஸ் எழுத முடியுமா? என்னய்யா கேள்வி?''

''கோவிச்சுக்காதீங்க. இப்பல்லாம் டாக்டரேட்டெல்லாம் டிராமா நோட்டீஸ் மாதிரி குடுக்கிறாங்கன்னு கேள்வி. அதனால தான் கேட்டேன்.''

''ஆறு வருஷம் ரிசர்ச் பண்ணேன்யா! ஒரு வெள்ளைக்காரன் கூட.''

''பாழுங் கிணத்து மேலேயா? இல்லாடி ஸார் நீங்க.''

''கிணறு மட்டும் இல்லே. அதுக்குப் பக்கத்தில இருக்கிற மண்டபம், மண்டபச் சுவர் விதானம், அதில இருக்கிற இன்ஸ்க்ரிப்ஷன்ஸ்....''

''அடடா....''

''வைத்தியநாத சுவாமி கோயில், மாறவர்மன் த்ரிபுவீர பாண்டியன், சகலலோக சக்கரவர்த்திங்கன்....''

''சனி சனி பளிங்கு மாதிரி புரியுது! எனக்கு வேண்டியது ஒரு சின்ன மாட்டர். அந்த இடத்துக்கு என்னைப் போல ஒரு பாமரன் போக வழி! அவ்வளவுதான்.''

''தரேன்.''

பேராசிரியர் ஒரு காகிதத்தில் வரைப் படம் போல் போடத் துவங்க, வஸந்த்



# மேலும் ஒரு சாதனையாளர்

ஐந்து மொழிகள் தெரியும். (வங்காளம், மலையாளம், இந்தி, தமிழ், ஆங்கிலம்) பதினோரு வாத்தியங்கள் வாசிக்கத் தெரிந்தவர். ரவீந்திர சங்கீதமும், சாஸ்திரீய இந்துஸ்தானி இசையையும் முறையாகப் பயின்றவர்.

சென்னை விவேகானந்தா கல்லூரியில் சரித்திரத்தை பாடமாக எடுத்துக்கொண்டு பி. ஏ. படித்து வந்தார். 1978ம் வருடம் பல்கலைக்- கழகத்திலேயே இரண்டாவது மாணவராக வந்து சரித்திரம் படைத்தார். தொடர்ந்து அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் முதல் வகுப்பில் பி. எட். பட்டம் பெற்றுத் தேறினார். இன்று ஆதர்ச வித்யாலயாவில் ஆசிரியராகப் பணி புரிந்து வருகிறார்.

"பலருக்கு உடற்குறையில்லையேல் மனக்குறை மேலும் இருக்கும். எனக்கு உடல் குறையிருந்தாலும் மனக்குறை இல்லே. என்பதில் மகிழ்கிறேன்" என்கிறார் எட்டு வயதிலே பார்வை இழந்தும் துணிவை இழக்காத என். ஹரிஹரன். இவரது லட்சியம் கல்லூரி அளவில் ஒரு விரிவுரையாளராக ஆவது.

• [illegible]

● கபடமில்லாத சிரிப்புடனும் பூரிக்கும் இளமையுடனும் இந்த இதழ் அட்டையை அலங்கரிக்கும் இருவரும் வாழ்க்கையைச் சவாலாக ஏற்றுக் கொண்டிருப்பவர்கள். இடதுபுறம் உள்ள குமாரி ஷரின் பீட்டர்ஸ், இந்த இதழ் ஆசிரியர் குழுவில் பங்கு வகிக்கிறார். தம்தோழி குமாரி அமுதா பற்றிக் கூறுகிறார்:

அமுதாவுக்குக் காது கேட்காது. அதனால் சரியாகப் பேசவும் முடியாது. ஊமையாகவே இருந்தவள் வீட்டில் பிளவர் பள்ளியில் தீவிரப் பயிற்சி பெற்றதால், இப்போது கொஞ்சம் கொஞ்சமாகப் பேசுகிறாள். நீச்சலிலும் சித்திரங்கள் வரைவதிலும் தேர்ச்சி பெற்றிருக்கிறாள்.

"இறைவன் கொடுக்காததைப் பற்றி ஏங்குவதை விட, கொடுத்ததை மேன்மேலும் விருத்தி செய்துகொள்வதில் ஆவலாக இருக்கிறாள். கடவுள் கருணை உள்ளவர், உலகம் அழகானது, மனிதர்கள் எல்லோரும் நல்லவர்கள் என்று நம்பிக்கையோடு இருக்கிறாள்.

வண்ணப்படம் எடுத்தவர்: ''உத்ரா''



இனியாவிடம் தன் கையைக் காட்டி ''எப்படிக் கன்னிப் போயிருக்கு பாரு. காலைல பட்ட தர்ம அடி. எல்லாம் அந்தக் கட்டுரையைத் தேடிட்டுப் போனப்ப ஏற்பட்ட விழுப்புண்கள்'' என்றான்.

''ச்....ச்....ச்...''

''உனக்கென்ன சுலபமா மூணு ச்! என்ன வலி வலிக்குது தெரியுமா?''

இனியா சைகையில் 'அப்புறம்' என்றாள்.

பேராசிரியர் ஏதோ குறிப்புக்காக அடுத்த அறைக்குச் செல்ல வஸந்த் உடனே உயிர் பெற்று, ''இத்தனை நேரம் உங்கப்பா கடிச்சார். காலைல உங்களுக்காக உதை பட்டேன். மூணு 'இச்'ல ஒண்ணாவது கன்னத்தில குடுத்தாகணும் நீ.'' என்றான்.

வஸந்த் அவளுக்கு மிக அருகில் வந்து விட்டான். இனியா அவனை ஒரு முறை வாசனை பார்த்துவிட்டு மூக்கால் சின்னதாக அவன் மூக்கை உரசிவிட்டு அவன் மார்பில் கை வைத்துத் தள்ளிவிட்டகற்றினாள்.

''இது போதும். ரெண்டு நாளைக்குத் தாங்கும்.''

பேராசிரியர் வந்து ''இந்தா இதில எல்லாம் குறிச்சுக் கொடுத்திருக்கேன். எனக்கென்னவோ இவங்களுக்கும் சரித்திரத்துக்கும் சம்பந்தம் இல்லைன்னு தோணுது. எதுக்காகன்னுதான் தெரியலை'' என்றார்.

''அவங்க ஏதோ ஒரு கெட்ட காரியத்துக்குக் கோஷ்டியா அங்க போயிருக்காங்க. என்ன காரியம்னு கண்டுபிடித்தல் எங்க காரியம். வரேன் ஸார், வரேன் இனியா.''

வஸந்த் தீர்மானத்துடன் திரும்பிச் செல்லும்போது ஓமர்கய்யம் என்கிற ரெஸ்டாரண்டில் வாசல் இழுத்து மூடப்பட்டு உள்ளே திடும் திடும் என்று காபரே இசை வழிந்தது. வெளியே கலாட்டாவை எதிர்பார்த்து ஒன்றிரண்டு தாட்டியான தர்வான்கள் காவல்.

வஸந்த் அந்த மர நிழலில் பைக்கை மறுபடி பார்த்தான்.

''என்ன பிரதர் ஷோ நடக்குதா?''

வஸந்த் தந்த ரூபத்தை துவார பாலகன் பற்றிக்கொண்டு கதவைத் தேவைக்கு ஏற்பட்ட அளவு திறந்து அனுமதித்தான்.

சங்கீதம் கலந்த புகைப்படலம் தாக்கியது. பூராவும் ஆண்கள் கூட்டம். அவர்கள் ஊடே வாலினியா என்று பெயரிடப்பட்ட ஒரு செலம் லோக்கல், ஜிகினாக்களை ஒவ்வொன்றாக உதறிக் கொண்டிருக்க வஸந்த் மோனைக் ஆசாமியைத் தேடினான். இருட்டில் அடையாளங்கள் கரைந்திருந்தன. வாலினியா ஒரு சுற்று சுற்றி அரை ஹெக்டேர் முதுகைக் காட்டினாள்.

ஆர்க்கெஸ்ட்ரா கைவசம் இருக்கும் வாத்தியங்களை யெல்லாம் துவம்சம் பண்ணி முடித்து, கடைசி நேர 'உம்பம்ப்பா'வில் விளக்கணைவதற்கு ஒரு கணம் முன்னால் அந்தப் பெண்ணின் மார்ப... விளக்கணைந்தது.

மற்ற விளக்குகள் மறுபடி மலர்ந்தபோது மேடை காலியாகி இன்டர்வல் விட்டிருந்தார்கள். வஸந்த் சுற்றிலும் பார்த்தான். அவனைக் காணோம்.

''யாரைப் பார்க்கிறீங்க பிரதர்?''

வஸந்த் சட்டென்று திரும்ப சாட்சாத் அவன்தான்! மோனைக் தடியன்.

''அட நீங்களா? காலைல சந்திச்சோம்ல. அப்ப அதிகம் உங்க கூடப் பேச முடியாமப் போயிடுச்சு. சந்தர்ப்பம் சரியா இல்லை. என்ன சாப்பிடறேன்?''

''என்னவா? உன்னை.''

''ஜோக்கடிக்கறேளா?...

''ஏய், உனக்கு எவ்வளவு தெரியும்?''

வஸந்த் சுற்று முற்றும் பார்த்து ''அண்ணே கிட்ட ஒரு ரகசியம் சொல்லட்டுமா? கிட்ட வாங்கோ காதோட சொல்றேன்'' என்றான்.

அந்த மூர்க்கன் காதைக் காட்ட, வஸந்த் ''எல்லாம் தெரியும்'' என்றான்.

''அப்ப என்ன செய்யறதா உத்தேசம்?''

''நீங்க என்ன செய்யப் போறீங்களோ அதே.''

வஸந்துக்கு அவன் என்ன கேட்கிறான், என்ன பதில் சொல்கிறோம் இரண்டு விஷயங்களும் குண்ட்ஸாக இருந்தது.

''பிரதர் உனக்கு ஒரு சுவாரஸ்யமான பெண்ணைச் சந்திக்க விருப்பமா?''

''பிரதர் அதைவிட முக்கியமான, சந்தோஷமான காரியம் இருக்க முடியுமா?''

''அப்ப உள்ளே வரீங்களா?'' (தொடரும்)

# இந்த இதழின் ஆசிரியர் குழு அறிமுகம்





✖ ராமன்

## என் நண்பன்

● திரு வரதகுட்டியைப் பற்றி ஆருயிர் நண்பன் திரு ராமன் :

வரதகுட்டி பி.காம் வகுப்பில் முதலில் தேறியவன். சி. ஏ. பாஸ் செய்தவன். எதையுமே வேகமாகப் புரிந்து கொள்வான். மனிதனாய்ப் பிறந்தவன், வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் அனுபவிக்க வேண்டுமென்று அடிக்கடி சொல்வான். தனக்குள்ள எல்லைக் கோட்டை ஆராய்ந்து திட்டமிட்டு அதை விஞ்சிக் காரியம் செய்து காட்டியவன். படிப்பு முடிந்தவுடன் தொழிலும் ஆரம்பித்தாகிவிட்டது. பல இடங்களுக்குப் போக வேண்டுமே! நல்ல உடல் நலம் வேண்டுமே! காலையிலும் மாலையிலும் கடுமையான தேகப் பயிற்சி செய்தான். மாம்பலம் ரயில்வே ஸ்டேஷனில் இரவு 11 மணியிலிருந்து 12 மணிவரை படிக்கட்டுகளில் நன்கு ஏறி இறங்கப் பழகினான்.

ஒரு லயன்ஸ் கிளப் அவனுக்குக் கையினால் ஓட்டும் மூன்று சக்கர சைக்கிளைப் பரிசளித்தது. கடும் மழை, வெய்யில், காற்று, இவைகளைப் பொருட்படுத்தாமல் தாம்பரம் முதல் கடற்கரை ஸ்டேஷன் வரை அந்தச் சைக்கிளிலேயே பல கம்பெனிகளுக்குச் சென்று வந்தான். உடல் வலி, கை வலி உண்டா? என்று நான் கேட்கும்போதெல்லாம் புன்னகை தான் பதில்.

நான் அவனைச் செல்லமாக ''மினி வேலை வாய்ப்பு அலுவலகம்'' என்று சொல்வேன். உடல் ஊனமற்ற பலருக்குத் தன்னால் முடிந்தவரை வேலை வாங்கித் தந்திருக்கிறான். அனைவருக்கும் தன்னம்பிக்கையையும் உழைப்பின் மகிமையையும் எடுத்துக் காட்டும் வீரன், வரதகுட்டி.

கொடைக்கானலில் கால்ஃப் கிளப் அருகே செங்குத்தான சேறும் சகதியும் மிக்க பாதையில் நடந்து ஏறி மலை உச்சியிலிருந்து இயற்கை எழிலை அவன் கண்டு மகிழ்ந்ததை நான் எப்படிப் புகழ்வேன்!

வரதகுட்டிக்கு கிரிக்கெட் என்றால் உயிர். ஒரு டெஸ்ட் மாட்ச் கூட விடமாட்டான். இந்தியர்கள் சரியாக ஆடாவிட்டால், ''பார்த்தியா, நானே போய் விளையாடிவிடலாம் என்று நினைக்கிறேன்'' என்று சொல்வதைக் கேட்டு நான் குபீரென்று சிரித்திருக்கிறேன்.

## என் தந்தை

● வயலின் சந்திரசேகரன் அவர்களைப் பற்றி மகள் பாரதி :

கண்ணுக்குக் கண்ணாக என் தந்தையை வளர்த்து இன்று உலகம் புகழும் பெருமையை அவருக்குக் கொடுத்தவர் அவர் தாயாரும், என்-பாட்டியுமான திருமதி சாருபாலா மோகன்தான். சின்ன வயதில் அவருக்குத் தலைவாரி, பொட்டு வைத்து ரசித்துப் பார்ப்பாராம் பாட்டி.

சிறு வயதிலேயே மஞ்சள் காமாலை நோயினால் இரண்டு கண்களை இழந்த இவருக்கு, வயலின்தான் உலகம். எப்போதும் சிரித்துக் கொண்டே இருப்பார்.

ஆனால் சிஷ்யர்கள் வயலின் வாசிக்கும்போது, யார் தப்பாக வாசித்தாலும் இவருக்குக் கோபம் மூக்குக்கு மேல் வரும். நான் அவரிடம் கற்றுக் கொண்டபோது தவறு செய்து வாங்கிக் கட்டிக் கொண்டிருக்கிறேன். இதற்கு மறுபுறமாக அவர் வாசிப்பைப் பற்றி நான் அடிக்கும் கமெண்டைக் கேட்டு ரொம்பவும் ரசிப்பார். அவருக்கு எதையும் சரியாகச் செய்ய வேண்டும் என்பதுதான் குறி. உணவு நன்றாக இருந்தால் செய்தவருக்கு 100க்கு 125 மார்க் என்று வேடிக்கையாகக் குறிப்பிடுவார். யாரையும் உற்சாகப்படுத்துவார். ஆழமுப்பலான பேச்சு என்பதையே அறியாதவர். தம் சக்திக்கு மீறி உதவிகள் செய்வார்.

பிறர் உதவி இல்லாமல் தாமே எதையும் செய்துகொள்வார். அவரால் ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குத் தனியாகப் பயணம் செய்ய முடியும். பார்வை இல்லையே தவிர டெலிபோன் நம்பரைச் சரியாகச் சுழற்றுவார். என்றோ சந்தித்த ஒருவர் குரலை, நன்றாக ஞாபகம் வைத்துக்கொண்டு அடையாளம் கண்டு கொள்வார்.





✖ பாரதி

கடந்த பத்து வருடங்களுக்குள் ஒரு தேதியை அவரிடம் கூறினால் அதற்கான கிழமையைச் சரியாகச் சொல்லிவிடுவார்.

அவருடன் நாங்கள் திரைப்படம், நாடகங்களுக்குச் செல்வோம். நல்ல கிரிடிக்.



## என் மகள்

● குமாரி ஷரீன் பீட்டர்ஸ் பற்றி அவர் தாய் திருமதி குஞ்சலா பீட்டர்ஸ்:



✕ குஞ்சலா

''இவளுக்கு ஏழு வயதானபோது போலியோவால் பாதிக்கப்பட்டாள். அதுமுதல் கால்கள் சக்தியை இழந்தன. என் ஒரே குழந்தைக்கு இப்படி ஆனது எனக்குப் பெரிய ஷாக். ஆனால் ஷரீன் இதைப் பற்றிக் கவலைப்படவில்லை. என் கண்களை அவளே துடைத்து விடுவாள். சில காலம் இவள் படிப்பு தடைப்பட்டது. பதினொரு வயதானபோது வித்யோதயாவில் சேர்த்தது அவள் வாழ்க்கையில் திருப்புமுனை. அங்கு மாடி ஏற அவசியமில்லை. அது பெரிய வசதியாக இருந்தது. எஸ். எஸ். எல். சி.யில் முதல் வகுப்பில் வெற்றி பெற்றவள், பின்பு எதிராஜ் கல்லூரியில் பொருளாதாரம் படித்து அதில் முதல் வகுப்பில் எம். ஏ. பட்டம் பெற்றாள்.

இசையில் ரொம்ப ஆசை. அவளுக்குக் கர்நாடக சங்கீதத்தில் பயிற்சி கொடுத்தோம். கடவுள் அவளுக்குத் தேன் மாதிரி குரல் கொடுத்திருக்கிறார். 1973ல் ஷரீன் முதன் முதலாக மேடையில் பாடத் தொடங்கினாள்.

இதுவரை இருபது படங்களில் (தமிழ், மலையாளம்) அவள் பின்னணியில் பாடியிருக்கிறாள். இதர பாடல்களும் பல இசைத்தட்டுக்களாய் வெளியாகியுள்ளன. டி. வி. நிலையம், வானொலி நிலையம் ஆகியவற்றிலும் ஷரீன் பிரபலமானவள்தான்.

''அம்மா, நான் ஒன்றும் கோழையல்ல. என்னால் முடியாதது ஏதும் இல்லை. என்மேல் யாரும் அனுதாபம் காட்ட வேண்டாம். எனக்கு எதிராகத் திறமையைக் காட்டட்டும்'' என்று அடிக்கடி சொல்வாள்.

ஊனமுற்றோர் நலனுக்காகப் பல இலவசக் கச்சேரிகள் செய்திருக்கிறாள்.

தோட்டத்தில் மலர்களை ரசிப்பது, போமரேனியன் நாயுடன் விளையாடுவது, படிப்பது, இயன்றவரை பிறருக்கு உதவுவது, சங்கீதத்தில் தன்னை மறப்பது, சித்திரங்கள் வரைவது — இதுதான் ஷரீனின் உலகம்.

## என் கணவர்

● திரு ராமகிருஷ்ணன் பற்றி திருமதி வசந்தா ராமகிருஷ்ணன்:

1969ம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் வாரத்தில் மாம்பலத்தில் என் அக்கா வீட்டில் என்னைப் பார்த்தார். நவம்பர் 21ம் தேதி எங்கள் திருமணம் கிருஷ்ணகிரியில் நடந்தது. இவரது தந்தை அப்போது அங்கே மாவட்ட செஷன்ஸ் நீதிபதியாக இருந்தார். எங்கள் திருமணத்துக்கு ஆன மொத்தச் செலவு ரூ. 300. எங்களுக்கு மூன்று பெண் குழந்தைகள். மூவரும் படுசுட்டிகள்.



இவர் பழனி சுப்பிரமணிய பிள்ளையின் சீடர். அவ்வப்போது கச்சேரிகளில் மிருதங்கம் வாசிக்கிறார். தமிழ், ஹிந்தி, மலையாளம், ஆங்கிலம், ஜெர்மன் ஆகிய மொழிகளை சரளமாகக் கையாளுகிறார். சென்னை தொலைக் காட்சியில் செய்தி வாசிப்பவர். இந்தியன் பாங்கில் மக்கள் தொடர்பு அதிகாரி.

இரண்டு வயதில் இளம்பிள்ளை வாதத்தினால் பாதிக்கப்பட்டு ஒன்பது நீண்ட ஆண்டுகள் படுக்கையிலேயே இருந்தார். அந்நிலையிலிருந்து இன்றைய நிலையை அடைவதற்குத் தம் பெற்றோரும் தம்முடைய இரண்டு தாய் மாமன்களும்தான் காரணம் என்று ஓயாமல் நன்றியுடன் கூறுவார். பத்திரிகைத் துணுக்குகளிலிருந்து வேதாந்த நூல்கள்வரை சகலமும் படிப்பார்.

துணிச்சல் இவர் கூடப் பிறந்தது. கால்கள் வலுவிழந்த போதிலும் நிற்கும்போதும், நடக்கும்போதும், வாழ்க்கையை நடத்தும் விதத்திலும் தம் சொந்தக் கால்களிலேயே நிற்க விரும்புகிறார்.

எத்தனையோ சங்கங்களுக்குத் தலைவராகவோ, செயலாளராகவோ பொருளாளராகவோ இருந்து தமது திறமையை நிரூபித்திருக்கிறார். சொந்தத்தில் இப்போது வைத்திருக்கும் மூன்று சக்கர ஆட்டோ ரிக்ஷாவைத் தாமாகவே ஓட்டிச் செல்கிறார். ''மனிதன் தினம் தினம் பயந்து சாகக் கூடாது. வாழ்க்கையில் ஒருமுறைதான் சாக வேண்டும்'' என்று அடிக்கடி சொல்கிறார். இவரைக் கணவராக அடைந்ததில் நான் பெருமைப்படுகிறேன்.



✕ வசந்தா

# வட்டமேஜை



''இந்தக் குல்லாய் போடுகிற விவகாரமெல்லாம் எனக்குப் பிடிக்காது தெரியுமல்லவா?'' என்று கேட்பது போன்ற முகபாவம் காணப்பட்டாலும் பிரதமர் மலர்க் கிரீடத்தை மகிழ்ச்சியோடுதான் ஏற்றார், பள்ளிக் குழந்தைகள் சூட்டியதால்! மதுரைக்கு உலகத் தமிழ் மாநாட்டையொட்டி விஜயம் செய்தபோது விமான நிலையத்தில் எடுத்த படம். எதிரே மூக்குக் கண்ணாடி அணிந்திருப்பவர் கல்வித்துறை இயக்குனர் டாக்டர் இ. வேங்கடசுப்பிரமணியம்.

தலையங்கத்தில் ''10 கோடியில் 85 சதவிதம் நிரந்தர பயனுள்ள காரியங்களுக்குச் செலவாயிருந்தாலும் மகிழ்வே. மதுரை மக்கள் மூலம்தான் தீர்ப்பைப் பெற முடியும்'' என்கிறீரே, இந்த நாட்டில் வழங்கப்பட்ட மெஜாரிட்டி தீர்ப்புகள் எப்போது சரியாயிருந்தது? உங்கள் நிருபர் மதுரையை வலம் வரவேண்டியதுதானே!

மேட்டுப்பாளையம் — எம்.பி. ரத்தினகுமார்

உலகத் தமிழ் மாநாட்டின் ஆடம்பரங்கள் அவசியந்தானா? என்ற ''கரூர்'' விமர்சனத்தைக் காணோம். மழுப்பியிருக்கிறீர்கள். இந்தக் கோடிக் கணக்கான பண விரய மாநாட்டால் தமிழ் ஒரு அங்குலம் கூட வளரவில்லை. இது தேவையில்லாத ஆடம்பரக் கண்காட்சி. மதுரையின் வளர்ச்சிக்காகச் செய்யப்பட்டது என்கிற சமாதானம் வேறு வழியின்றிக் கூறப்படும் நொண்டிச் சமாதானம்.

சிதம்பரம் — சிவ. ராஜகுமார்

ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டை ஒட்டி வரிப் பணம் வாரி இறைக்கப்பட்டது. மதுரை நகரில் சோடியம் வேப்பர் லாம்ப், ஏராளமான கழிப்பிடங்கள், ஓரிரு பூங்காக்கள், ஒலி-ஒளிக் காட்சி போன்ற சில நிரந்தர நன்மைகள் தவிர பல கோடி ரூபாய் வீணடிக்கப்பட்டுள்ளன. மின் தட்டுப்பாடு தொழிலகங்களுக்கு முப்பது சதவிதம் அமுலில் இருந்த காலத்தில் தேவையின்றி எங்கு நோக்கினும் அலங்கார விளக்குகள். மின் சாரத்தை வீணாக்காதீர்கள் என்று ஊருக்கு உபதேசிக்கும் மின்சார வாரியக் கட்டிடத்துக்கும் மின்விளக்கு அலங்காரம்! இப்படி எத்தனையோ அம்சங்களை அடுக்கிக்கொண்டே போகலாம்.

இந்த நாடு என்றுதான் விளம்பரம் தேடும் அரசியல்வாதிகளிடமிருந்து தப்பி மக்களுக்காக நல்ல திட்டங்களைக் கொண்டு வரப் பாடுபடும் அரசைக் காணுமோ?

திண்டுக்கல் — ஜெயச்சந்திரன்

கன்னித் தமிழுக்கு ஆங்கிலேயக் காதலனைத் திருமணம் செய்து வைத்து வார்த்தை மழலைகளைப் பெற்றுத் தர ஏற்பாடு செய்ய வேண்டுமெனத் தலையங்கத்தில் குறிப்பிட்டிருந்தது கண்டு மகிழ்ந்தேன். ஆனால் திருமணம் முடிந்த பின்னர் நமது மணமகளை, கணவன் அடிமையாய் ஆட்டி வைத்து அவளைச் சீரழித்து விடுவான் என்ற அச்சமும் நெஞ்சில் விரவியது.

சங்கரன்கோயில் — ஏ. சங்கரன்

கல்கிக்கு கடிதம் எழுதிவிட்டு பிளஸ்-2 படிக்கும் என் பையனை நகல் எடுக்கச் சொன்னால் சீர்திருந்திய(!) தமிழில்தான் எழுத முடிகிறது. அவனால். தமிழ் மூலமாகவே, ''தலைமுறை இடைவெளி''. அரசியலில்மொழி மாட்டிக் கொண்டால் என்ன ஆகும் என்பதற்கு வேறு சான்றே வேண்டாம்.

மதுரை — டி. ஆர். அலமேலு

கல்கியின் சிறப்புக்கு மேலும் பெருமை சேர்க்க சாகித்ய அகாடமியின் பரிசுக்கு சேரமான் காதலி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

(1) 'கல்கி' அவர்களின் ''அலை ஓசை''
(2) ராஜாஜி அவர்களின் ''சக்கரவர்த்தித் திருமகன்''
(3) சோமு அவர்களின் ''அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்''
(4) அகிலன் அவர்களின் ''வேங்கையின் மைந்தன்.''
(5) தற்பொழுது கவிஞர் கண்ணதாசனின் ''சேரமான் காதலி''.

கல்கியின் பணி தொடரட்டும்.

அரக்கோணம் — வை. ராமச்சந்திரன்

''மீண்டும் மனிதனானேன்'' படித்தேன். டாக்டர்தான் ராஜனின் பெருங்குடலை வெட்டி எடுத்தார் என்றால் நீங்களுமா ராஜனின் போட்டோவிலிருந்து முகத்தை வெட்டி விட்டுப் பிரசுரிக்க வேண்டும்?

சென்னை-24 — கணஜா

[நிகழ்ச்சிகள் அனைத்தும் மெய்யானாலும் நோயாளி தம் படம் வெளியாவதை விரும்பவில்லை. ராஜன் என்ற பெயர் கற்பனையே. —ஆர்.]

என்னமாய்ப் புகுந்து விளையாடுவார் இந்த சுஜாதா! ''வரமாட்டாமல்'' என்ற அவருடைய பிரயோகம் எத்தனை தமிழ்ப் பண்டிதர்களை நிமிர்த்தி உட்கார வைத்திருக்கும்? மொழி ஒரு கருவி. அதைப் பூஜையில் வைத்துவிட்டால் துருப்பிடித்து விடும் என்பதை 'சுஜாதா'வை விட நன்றாக யாரால் நிரூபிக்க முடியும்?

திருநெல்வேலி — சங்கரன்

புதிய

# ஃபேப்

டிட்டர்ஜெண்ட் கட்டி

## வெளுக்கிறது உங்கள் துணிகளை அதிகத் தூய்மையாக

அதிக வெண்மையாக

அதிக பிரகாசத்துடன்

### விசேட பளிச்சிட வைக்கும் சக்தியை உள்ளடக்கிய உன்னத ஃபார்முலா.

புதிய ஃபேப் டிட்டர்ஜெண்ட் கட்டியின் சக்திவாய்ந்த நுரைவளம் ஆழ ஊடுருவிச் சுத்தம் செய்து விடாப்பிடியான அழுக்குகளையும் அறவே அகற்றுகிறது.
அதன் விசேட பளிச்சிட வைக்கும் சக்தி வெள்ளைத்துணிகளை அதிக வெண்மையாக்குகிறது— வண்ணத்துணிகளை அதிகமாக பிரகாசிக்க வைக்கிறது—
உங்கள் துணிகளுக்கு தூய்மை கலந்த புதுமணம் தருகிறது.

அது ஈரக்கசிவற்றது—எனவே அதிக துணிகளை வெளுக்கிறது— உங்களுக்கு சிறந்த சிக்கனம்.

**இணையில்லா வெண்மையும், ஈடில்லா பிரகாசமும் தரும் சலவைக்கு-புதிய ஃபேப் டிட்டர்ஜெண்ட் கட்டி!**




தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரியில் கிடைக்கிறது.

கோல்கேட்-பாமோலிவ் தரமாக அளிப்பது

FDC.G.2 TM

## 14

அறையெங்கும் மொஸைக்கின் வழு வழுப்பு. சுவரெங்கும் இடுப்புயரத்துக்குச் சதுரக் கற்கள் பதிக்கப் பட்டிருந்தன. கார்னர்களில் பிளவர் வாஸ். நடு நாயக மாகச் சின்னதான மீன் தொட்டியில் வர்ண மீன்கள் விளையாடிக் கொண்டிருந்தன.

''இங்கே நீங்கள் மட்டும்தான் இருக்கிறீர் களா?''

''என் அப்பாவும் அம்மாவும் பெங்களூருக்குப் போயிருக்கிறார்கள். தம்பிகள் இருவர் உண்டு. அவர்கள் பள்ளிக்கூடம் போய்க் கொண்டிருக்கிறார்கள்.''

''பரசுவை உங்களுக்கு எத்தனை நாளாகத் தெரியும்?''

அம்பிகா ஏனோ இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லாமல் இருந்து விட்டாள்.

''பரசுவைப் பற்றிக் கேட்கிறீர்களே! நீங்கள் யார்? அதை முதலில் சொல்லுங்கள். ஏன் அவரைப் பற்றிக் கேட்கிறீர்கள்? அவர் கடந்த வாரம் ஒரு பெண்ணைப் பற்றிச் சொல்லி யிருந்தார். 'அவளைச் சினிமாவில் சேர்த்து விட வேண்டும். ஏதாவது சின்ன ரோல் கொடுத்து உதவினால் பரவாயில்லை' என்றார். ஒருவேளை... அது உங்களுக்காகத் தான் இருக்க வேண்டும் என நினைக் கிறேன்.''

''மற்றொரு பெண்ணா? மன்னிக்க வேண் டும். நிச்சயமாக அது நான் இல்லை. அப் படிப்பட்ட கோரிக்கை எதையும் அவரிடம் வேண்டவில்லை. அது எனக்காக இருக்காது. அது அவருடைய இன்னொரு மனைவிக்காக இருக்கலாம். அல்லது இன்னொரு காதலிக் காக இருக்கலாம்.''

அம்பிகா சினத்துடன் இடத்தை விட்டு எழுந்தாள்.

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

''உண்மைதான் பேசறேன்! நான் இங்கே ஏன் வந்தேன் தெரியுமா? எதற்காக வந் தேன் தெரியுமா? எப்படி வந்தேன் தெரி யுமா? இவைகளைச் சொல்லத்தான். ஒன் றைத் தெரிந்து கொள்ளவும் இன்னொன் றைச் சொல்லவும் வந்தேன். நேற்று நீங் களும் அவரும் இங்கிருந்து மோட்டார் சைக்கிளில் புறப்படுவதைப் பார்த்தேன். இன்று அந்த உறவின் நெருக்கம் பற்றி விசாரித்து விட்டுப் போகலாம் என்று வந் தேன்.''

அம்பிகா தான் நின்ற இடத்திலேயே படபடத்து நின்றாள். சாதாரண மனோ பாவங்களை உடனே விட்டு விட்டுச் சற்றே கடினப்பட்டவள் போல...

''எனக்கு உடனே தெரிந்தாக வேண்டும். வீணாக எதையும் சுற்றி வளைக்க வேண்டாம். நீங்கள் யார்?''

''நான் அவருடைய மனைவி. என் பெயர் சுமங்களா!''

''மனைவியா?''

''ஆமாம்.''

''பொய்!''

''இதை நம்புவதும் நம்பாததும் உன் இஷ்டம். உன்னை நம்ப வைக்க வேண்டும் என்றோ அல்லது நீயாக இதை நம்ப வேண்டும் என்றோ நான் சிரமப்படப் போவதில்லை. ஏனென்றால் இதில் ஏதும் ஏமாற்று வேலை இருந்தால்தானே அந்தச் சிரமம் வர...''

அம்பிகா அந்த அறையில் கிடந்த சோபா ஒன்றில் உட்கார்ந்து விட்டாள். அவள் அதற்குப் பிறகு பேசவே யில்லை. சோபாவை விட்டு எழுந்தாள். குறுக்கும் நெடுக்குமாக நடக்கத் தொடங்கினாள். மீண்டும் வந்து சோபாவின் பாதி மூலையில் திரும்பி அமர்ந் தாள். கண்களில் கண்ணீர். சுமங்களா வைப் பார்த்தாள். பேசவேயில்லை.

அவள் — அந்தச் சமயத்தில் திடீரென்று கேள்விப்பட்ட செய்தியால் — மனம் எப்படிப் பாதிக்கப்பட்டிருக்கிறாள் என்பதை மௌன மான சோகம் ஊர்ஜிதப்படுத்தியது.

அதைச் சுமங்களா உணர்ந்து கொண் டாள்.

''உங்கள் பேச்சை நான் எப்படி நம்பு வது?''

''உங்களைப் பலவந்தப்படுத்தி நம்பவைக் கும் பிரயத்தனங்களை நான் மேற்கொள்ளப் போவதில்லை. அது எனக்கு அவசியமும் இல்லை. அவர் என்னை விவாகம் செய்து கொண்டார். அதற்கு முன் என்னுடன் பழக விரும்பினார். நான் கூடுமான வரையிலும் ரிசர்வ்டாக இருக்கவே பிரயத்தனப்பட் டேன். நான் வளர்ந்து ஆளாக்கப்பட்ட அந்த வீட்டின் சூழ்நிலையால் அவரிடம் மாட்டிக் கொண்டேன். அவருடைய நேய மான அன்பை நான் விரும்பியது உண்மை. ஆரம்பத்தில் அவருக்கும் எனக்கும் உள்ள தூரத்தை அதிகமாகவே வைத்துக் கொண்

# விடியலே அணைந்த விளக்கு

மகரிஷி

டேன். ஆனால், தவிர்க்க முடியாத சூழ்நிலை யில் அவருடைய வலையில் விழுந்துவிட் டேன். விழுந்து விட்டேன் என்பதைக்கூட இன்று ஏமாற்றப்பட்ட பின்புதான் சொல் கிறேன்.''

அம்பிகா சுமங்களாவையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

வந்தவுடன் எந்த நிலையில் உட்கார்ந்திருந்தாளோ அதே நிலையில் உட்கார்ந்தபடி சுமங்களா பேசினாள். அவள் அம்பிகாவை நிமிர்ந்துகூடப் பார்க்கவில்லை.

''நான், என்னை அவரிடம் இழந்ததற்கான நியாய அநியாயங்களைப் பேச விரும்பவில்லை. அது தவறு என்று உணர்ந்தேதான் அன்றும் இருந்தேன். இன்றும் இருக்கிறேன். இத்தனைக்கும் என்னை நான் எனக்குள் மிகவும் ஜாக்கிரதையானவள் என்று தற்பெருமையாக வேறு எண்ணிக் கொள்வதுண்டு. நான் யாரிடமும் ஏமாற மாட்டேன் என்று எனக்குள்ளேயே கர்வியாகக் கூட இருந்திருக்கிறேன். அவைகளெல்லாம் ஒரு சமயத்தில் சிதிலப்பட்டுப் போய்விட்டன என்பதையும்நான் புரிந்து கொண்டு வெட்கமும் அடைந்தேன். இன்றும் வெட்கப்பட்டவளாகத்தான் உன் முன் உட்கார்ந்திருக்கிறேன். மன்னிக்க வேண்டும்... உங்கள் முன் உட்கார்ந்திருக்கிறேன்.''

''பரவாயில்லை. என்னை ஒருமையிலேயே கூப்பிடலாம்!''

''நன்றி! இத்தனையும் நடந்த பிற்பாடு நான் விழித்துக் கொண்டேன். என்னை விட்டு விட்டு ஓட நினைத்தார். பலவந்தப் படுத்தி... ஒரு வகையில் நிர்ப்பந்தப்படுத்தி அவரை மணந்து கொண்டேன். தட்ஸ் ஆல்''

''அதன் பிறகு?''



''அதன் பிறகு என்ன! அவர் என்னைப் பதிவுத் திருமணம் செய்து கொள்ளும் முன்பே அவருடைய மனோபாவம் தெரிந்து விட்டது. அவர் என்னை வாழ வைக்கப் போவதில்லை. விட்டு விட்டு ஓடப் போகிறார் என்பதைத் தெரிந்து கொண்டேதான் மணந்தேன். ஏனென்றால் அந்த நிலையில் திருமணம் என்கிற ஒரு சடங்கு ஏதோ ஒரு ரூபத்தில் எனக்குத் தேவைப்பட்டது. அதனால் மணந்து கொண்டேன்.''

அம்பிகா எழுந்தாள். உள்ளே போனாள். அப்படிப் போகும்போது அழுது கொண்டே தான் போனாள். சிறிது நேரத்தில் வெளியே வந்தாள். அவள் கையில் இரண்டு கப் அண்ட் 'சாசரில் ஆவி பறக்கும் இன்ஸ்டெண்ட் காப்பி இருந்தது.

''குடியுங்கள்.''

சுமங்களா எடுத்துக் குடித்தாள். அம்பிகாவும் குடித்தாள்.

''நான் உன்னை எச்சரிக்க வேண்டும் என்பதற்காக இங்கே வரவில்லை. உன்னை மிரட்டவும் வரவில்லை. அவரைத்தான் எச்சரிக்கப் போகிறேன். அதற்கு முன் ஒரு விளக்கமும் உண்மையும் தெரிய வேண்டும். வெறும் அனுமானங்களைக் கொண்டு நாம் செயலில் இறங்கக் கூடாது. ஒருவரைச் சந்தேகிக்கவும் கூடாது இல்லையா!''

சுமங்களா எழுந்து நின்றாள்.

அம்பிகாவிடம் முதலில் இருந்த உற்சாகம் இல்லை. மந்த நிலையில் இருந்தாள்.

''தகுந்த ஆதாரங்களை வைத்துக்கொண்டு தான் ஓர் உண்மையைப் புரிய வைக்க வேண்டும் என்கிற நிர்ப்பந்தம் வரும்போது மட்டுமே இதைக் காண்பிக்க வேண்டும்'' என்று கூறிக் கொண்டே தன் ஹேண்ட் பேக்கிலிருந்து போட்டோ ஒன்றை எடுத்தாள் சுமங்களா. பிறகு, ''அப்படி இல்லாத போதும், அதற்கு அவசியம் இல்லாத போதும் இதைக் காண்பிக்க வேண்டாம் என்றுதான் இந்தப் போட்டோவை இது நேரம் வரை உன்னிடம் காட்டவில்லை. ஆனால் உன்னிடம் இருக்கும் நிதானத்தன்மை என்னை மிகவும் பெருமை கொள்ள வைத்து விட்டது. நீ எதையும் அறிவுபூர்வமாய்ச் சிந்திப்பாய் என்கிற நம்பிக்கையும் தோன்றியிருக்கிறது. இதோ பார்... ஒரு திருமணம்'' என்று கூறித் திருமணத்தன்று எடுத்துக் கொண்ட போட்டோப் பிரதியை அம்பிகாவிடம் நீட்டினாள்.

அதை வாங்கிப் பார்த்தபோது அவள் கரம் லேசாக நடுங்கியது.

''இது என்னிடம் இருக்கட்டும். வைத்துக்கொள்ளலாமா? தேவை முடிந்ததும் திருப்பித் தருகிறேன்.''

''வைத்துக்கொள். என்னையும் நீ ஒருமையில் அழைக்கலாம்.''

அவள் கண்ணீர் விட்டாள்.

அவளது கரத்தைக் குலுக்கினாள் சுமங்களா.

''நன்றி'' என்று கூறும்போது, இத்தனை நேரம் அடங்கிக் கிடந்த சோகம் அவள் நெஞ்சை உடைத்துக் கொண்டு வெளிப்பட்டு விட்டது. வாய் விட்டு விம்மிக் கொண்டே சோபாவில் போய் விழுந்தாள்.

உடல் குலுங்க அழுது கொண்டு சோபாவில் தலை சாய்ந்து உட்கார்ந்திருந்த அம்பிகாவைச் சில விநாடிகளில் சுமங்களா பார்த்தாள். கதவை ஒரு கையால் திறந்து வைத்துக் கொண்டு நின்றிருந்த அவள் வெளியே வந்து விட்டாள்.

பரமேசுவரன் வருவானென்று அவள் எதிர்பார்த்தது வீண் போகவில்லை.

அவள் தன் வேலையில் ஈடுபட்டிருந்தபோது அவனுடைய மோட்டார் சைக்கிள் உறுமிக் கொண்டு லாண்டரி முன் வந்து நின்றது.

உள்ளே இருந்தபடியே அவனைப் பார்த்தாள்.

அரை மணி நேரம் முன்னதாகப் போக வேண்டும் என்று சுமங்களா குமாரனிடம் கேட்க வந்தபோது அவன் போனில் யாரிடமோ பேசிக் கொண்டிருந்தான். அப்படிப் பேசிக் கொண்டிருந்தபோது தன் பக்கத்துப் பேச்சைக் கூடுமானவரை குறுக்கிக்கொண்டு பூடகமாக நகைத்தான். அடிக்கடி, தன் எதிரே இருந்தவளைப் பார்த்து நகைத்தான். பேச ஆரம்பித்தபோது ஒரு விதமாகப் பேசியவன் திடீரென்று ''ஆமாம் கண்ணு... சரிம்மா, செய்யம்மா... நீ சும்மா வாம்மா... அட பயப்படாதே வாம்மா! நான் கவனிச்சுக்கறேன்'' என்று பேசினான். சுமங்களா சிரித்துக் கொண்டாள். 'இந்தக் காலத்து வாலிபர்களிடம் மிக ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். நெளிவு சுளிவு அதிகமாகத் தெரிந்த திருடர்கள்' என்று எண்ணிக் கொண்டாள்.

அவள், அவன் போனில் பேசி முடித்த கையோடு அனுமதி கேட்டாள்.

அவன் அவளிடம் அரை மணி நேரத்துக்குண்டான சிறுவேலையொன்றைக்கொடுத்து, ''இதை மட்டும் சரிபார்த்துக். கொடுத்து விட்டுப் போங்கள். இன்று இரவே பாஸுக்கு சம்மெரி கொடுத்தனுப்பணும்'' என்று பணிவுடன் கேட்டுக் கொண்டான். எனவே அவள் தன் பர்மிஷனை ஒதுக்கி வைத்து விட்டு, அவன் கொடுத்த சிறு வேலையைக் கவனிக்கும்படியாகி விட்டது. அப்பொழுது தான் பரமேஸ்வரன் வந்தான்.

அவன் வருவதைக் கவனியாதவன் போல் மேல் மாடி ஹாலுக்குச் குமாரன் சென்றான். அங்கு ஏற்கனவே வேலை செய்து

---

ஒருவர்: இன்னிக்கென்ன நம் தலைவர் எதைச் சொன்னாலும் ''மிகவும் அடக்கத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன்''னு அடிக்கடி சொல்றாரு.

மற்றவர்: அவரு சம்சாரம் இன்னிக்குக் கூட்டத்திற்கு வந்திருக்காங்களாம்.

-பி: இராஜேந்திரன்



# உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...




## செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த
## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. G. 4. TH

# டாடா ஸ்டீல் அளிக்கும் அதிக சக்தி வாய்ந்த

# ரீயின்ஃபோர்ஸிங் பார்ஸ்

## கோல்ட் டுவிஸ்டட் டிஸ்கான் 42
## கோல்ட் டுவிஸ்டட் டிஸ்கான் 50

திடமான பாலங்கள், அணைக்கட்டுகள், வீடுகள் கட்டுவதற்கு—பலகாலங்களுக்கு அழிவில்லாத அமைப்புகளுக்கு. தங்களது அதிகபட்ச சக்தியை ஈர்த்து இந்த ரீயின்ஃபோர்ஸிங் பார்கள், ஆயுட் காலங்களை அதிகரித்தும், இரும்பின் சேர்வையைக் குறைத்தும் மேலும் பொருளாதார சிக்கனத்தையும் கொடுக்கிறது.

மற்ற விவரங்களுக்கும், உங்கள் தேவைகளுக்கும் கீழ்கண்ட முகவரிகளுக்கு தயவு செய்து எழுதவும்:

டைரக்டர் ஆப் மார்க்கெட்டிங்
தி டாடா அயர்ன் அண்ட்
ஸ்டீல் கம்பெனி லிமிடெட்
43 சௌரங்கி ரோடு
கல்கத்தா 700071

ரீஜன்ஸ்:

ரீஜனல் மானேஜர் [நார்த்]
தி டாடா அயர்ன் அண்டு
ஸ்டீல் கம்பெனி லிமிடெட்
பாங்க் ஆப் பரோடா பில்டிங்
16 பார்லிமெண்ட் வீதி
புது டெல்லி 110 001

ரீஜனல் மானேஜர் [ஈஸ்ட்]
தி டாடா அயர்ன் அண்டு
ஸ்டீல் கம்பெனி லிமிடெட்
43 சௌரங்கி ரோடு
கல்கத்தா 700071

ரீஜனல் மானேஜர் [சௌத்]
தி டாடா அயர்ன் அண்டு
ஸ்டீல் கம்பெனி லிமிடெட்
30J, மகாத்மா காந்தி ரோடு
பாங்களூர் 560 001

ரீஜனல் மானேஜர் [வெஸ்ட்]
தி டாடா அயர்ன் அண்டு
ஸ்டீல் கம்பெனி லிமிடெட்
நியூ இந்தியா அஷ்யூரன்ஸ்
பில்டிங்
87 மகாத்மா காந்தி ரோடு
ஃபோர்ட், பம்பாய் 400023

ஏரியா மானேஜர்ஸ்:

அகமதாபாத், பாங்களூர், பம்பாய், போபால், கல்கத்தா, கொச்சின் [எர்ணாகுளம்], டெல்லி, ஜாம்ஷெட்பூர், ஜலந்தர், கான்பூர், மதுரை, நாக்பூர், பாட்னா, செகந்தராபாத், விஜயவாடா.



**டாடா ஸ்டீல்**

HTC-TIS-4047-1

கொண்டிருந்தவர்களை, அந்தந்த வேலையை அப்படியே வைத்து விட்டு வெளியே போகும் படி சொல்லி விட்டான்.

அவர்கள் படியிறங்கிப் போய்விட்டார்கள்.

மோட்டார் சைக்கிளைத் திருப்பி ஓரமாக நிறுத்திவிட்டு வந்தான் பரமேஸ்வரன். பேண்ட் பாக்கெட்டிலிருந்த கலர்க் கர்ச்சீப்பை எடுத்தான். முகத்தைத் துடைத்துக் கொண்டான். ஷர்ட், பேண்டைத் தெருவில் நின்றபடியே சரி செய்து கொண்டான்.

இவைகளை மௌனமாகப் பார்த்துக்கொண்டிருந்த சுமங்களாவை, தன் கையில் இருந்த புத்தகமொன்றை மாடி அறையில் வைக்கும்படி கூறி மேலே அனுப்பி விட்டான், சுகுமாரன்.

இதுவரையில் தன் செய்கையில் எவ்வித சந்தேகமும் வராமல் பார்த்துக் கொண்டான், அவன். கோபமாகப் படியேறி நின்ற பரமேஸ்வரனைப்புன்னகையுடன் பார்த்தான். சுமங்களா மாடி அறையில் இருக்கிறாள் என்பதை ஜாடை மூலம் தெரிவித்தான்.

மாடியில் இருக்கும் சுமங்களாவின் காதில் விழும்படியாக....

''யார் வேண்டும் உங்களுக்கு? மிஸ் சுமங்களாவா? இருக்காங்க.. மாடியிலேதான் இருக்காங்க... மேலே போய்ப் பார்க்கலாம். சுமங்களா உங்களைப் பார்க்க யாரோ வந்திருக்காங்க''என்றான், மிக சப்தமாக.

பரமேஸ்வரன் படிகளில் தாவினான்; ஹாலில் போய் நின்றான். சுமங்களா கீழே இறங்கி வரத் தயாராக மேல் படிக்கட்டில் நின்றிருந்தாள். அவளைப் பின்னுக்குத் தள்ளிக்கொண்டு போகிறவன் போல் முகத்தைக் கொடூரமாக வைத்துக் கொண்டு முன்னேறினான். அவன் முகத்தில் காணப்பட்ட சினத்தைக் கண்டு சற்று அச்சம் கொண்டவளாகப் பின்னால் நகர்ந்தாள். பின்புறம் ஒரு பீரோவின் மீது மோதுண்டு நின்றாள்.

தன் ஆத்திரத்தை யெல்லாம் ஒன்று திரட்டி உள்ளங்கைக்குக் கொண்டு வந்தவன் போல் எடுத்த எடுப்பிலேயே அவள் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை கொடுத்தான். அதைத் தாங்க முடியாமல் சுருண்டு போன சுமங்களா, ''ஐயோ!'' என்று அலறிக் கொண்டே பீரோவின் மீது சாய்ந்தாள்.

''ஐயோ!'' என்கிற முதல் அலறல் கீழே வந்து ஒலித்தபோது—

பெரிய ரசீதுப் புத்தகமொன்றைப் பிரித்து வைத்துக் கொண்டு சுகுமாரன் தனக்குள் சிரித்தபடி கணக்குகளைக் கவனித்தான்.

'ஐயோ! அம்மா'

பால் பாய்ண்ட் பேனாவில் தீர்ந்து போன ரீஃபிலை எடுத்து எறிந்துவிட்டுப் புதிய ரீஃபிலைப் போட்டுத் திருகி மூடினான் சுகுமாரன்.

''ஏண்டி! உனக்கு எவ்வளவு திமிர் இருந்தால் நேத்து அம்பிகாவை வந்து பார்த்திருப்பே! அவளிடம்... இல்லாத பொய்யெல்லாம் சொல்லியிருப்பே!''

மேலே....

மூர்க்கமான தாக்குதல்களால் செயல் இழந்து உட்கார்ந்திருந்தாள் அவள். அந்த அரக்கனை உடலால் எதிர்த்துப் போராட வலுவில்லை. அதை உணர்ந்தாள். எதிர்ப்புச்



''சோபாவில் உட்கார்ந்து கொண்டிருந்தாய் என்ற காரணத்துக்காகவா உன்னை அந்த வீட்டு எஜமானி வேலையை விட்டு நீக்கிவிட்டாள்?''

''ஆமாம், என் பக்கத்திலே வீட்டு எஜமானரும் உட்கார்ந்திருந்தார்!'' -பாரதிநாதன்

---

சக்திகளை விரயமாக்கிக் கொண்டு மேலும் பலவீனப்பட அவள் தயாராக இல்லை.

இன்றுமட்டுமில்லை. இன்னும் சில காலம் இந்த மூர்க்கனிடம் இப்படி வதைபட வேண்டியதுதான். இவனை ஒழிக்கிற வரை வெறும் எதிர்ப்பைக் காட்டிப் பாழாகிப் போய்விடக் கூடாது.

''நேற்று நீ எதற்காக அங்கே வந்தாய்?''

''உண்மையைச் சொல்ல வந்தேன்!''

''எதுடி உண்மை?''

அவளுடைய தோள்பட்டையில் காலால் உதைத்தான்.

''அம்மா!'' என்கிற ஈனஸ்வரத்துடன் பின்னால் சாய்ந்தாள்.

''நமக்குப் பதிவுத் திருமண ஆபீஸில் நடந்த திருமணம்...'' என்று பேசி முடிக்கும் முன், அவளை நிற்க வைத்து மீண்டும் முகத்தில் குத்து விட்டான்.

கடைவாய் ஓரத்தில் — ரத்தம்.

''பொய்... நீ பொய் சொல்றே!''

''போட்டோ இருக்கே!'' — ரத்தத்தைத் துடைத்துக் கொண்டாள். உள்ளங் கையைப் பார்த்துக் கொண்டாள்.

''அதுவும் பொய்!''

''ரிஜிஸ்டர் ஆபீஸில் நமது பெயர் இருக்கே!''

''அது என்னை என்னடி பண்ணும்? உன்னை ஒரேயடியாக ஒழிக்காமல் விடப் போவதில்லை. திட்டமா போடுகிறாய் திட்டம்? நான் யார் தெரியுமா? ஜாக்கிரதை! ஒரே வாரத்தில் உன்னைக் க்ளோஸ் பண்ணிடுவே . கையையோ காலையோ ஒடிச்சு ஆஸ்பத்திரியிலே கொண்டு போய்ப் போட்டுட்டுப் போய்விடுவேன்!''

''பார்க்கலாம். நான் உங்கள் மிரட்டலை ஒரு சவாலா எடுத்துக்கிறேன்'' என்று கூறிக் கொண்டே முகத்தின் வலி பொறுக்க முடியாமல் துடித்தாள்; பல்லைக் கடித்துக் கொண்டாள்.

''ஏண்டி, சவாலா விடறே? பார்க்கலாமா?''

வயிற்றில் எட்டி உதைத்தான்.

நெடுஞ்சாண் கிடையாக மல்லாந்து விழுந்தாள். நெஞ்சில் வலி மெதுவாக ஆரம்பித்தது.

தள்ளாடித் தள்ளாடி எழுந்தாள். கேசத்தைச் சிரமப்பட்டுச் சரிசெய்து கொண்டாள். பின்புறம் ஜாக்கெட் கிழிந்து போயிருந்தது. புடவையை இழுத்து அதைப் போர்த்திக் கொண்டாள்.

முகம், முழங்கை, முழங்காலெல்லாம் ரத்தக் கசிவு. துடைத்துக் கொண்டாள்.

(தொடரும்)

# ஊனமும் உள்ளமும்

ஆர். சூடாமணி



"அவர்தாம்பா! க்ரட்சஸ் வச்சுக்கிட்டு நடப்பாரே, அவர். இதுக்கு முந்தி கூட ஒரு தடவை என் மத்த சிநேகிதங்களோட இங்கே வந்திருக்கார்."

"ஓ, அந்த நொண்டிப் பையனா?"

சிவு திரும்பி விட்டான். கச்சலான உடம்பு பின்னும் குறுகி இருக்குமிடம் தெரியாமல் மறைந்து விட்டாற் போலிருந்தது. அந்த ஒல்லி நண்பன் என்று அவள் சொல்லியிருக்கக் கூடாதா? மாநிறம், சுருட்டை முடி, கண்ணாடி அணிந்திருப்பவன் — இப்படி ஏதாவது சொல்லி அடையாளம் காட்டியிருக்கலாம். 'சிவராமன் என்று பெயருள்ளவன், நான்கூட சிவு என்று அழைத்தேனே, நினைவில்லையா?' என்று கேட்டிருக்கலாம். ஆனால் அவள் சொன்னதோ? அந்த 'நொண்டிப் பையனா' என்று அவன் தகப்பனார் புரிந்து கொள்ளும் விதமாக விளக்கம். 'க்ரட்சஸ் வச்சுக்கிட்டு நடப்பாரே, அவர்'.

அவ்வளவுதான் நான். க்ரட்சஸ் வைத்துக்கொண்டு நடப்பவன்.

மறுநாள் மாலை அவனுடைய ஹாஸ்டல் அறைக்கு ஜலஜா வந்தாள்.

"நேத்து சாயங்காலம் டி.வி.யில் சினிமா பார்க்க எங்க வீட்டுக்கு வரேன்னு சொல்லியிருந்தியே, சிவு, ஏன் வரல்லை?"

அவன் தான் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தின் மீதிருந்த கண்களை விலக்காமலேயே "வேறு வேலை இருந்தது" என்றான்.

"ஒரு ஃபோன் பண்ணிச் சொல்லியிருக்கக் கூடாதா? அப்பாவும் நானும் உன்னை எதிர்பார்த்துக்கிட்டே இருந்தோம். அப்பா கூட 'உன் ஃப்ரெண்ட் வரப்போறதாய்ச் சொன்னியே, ஏன் வரலே'ன்னு என்னைக் கேட்டார்."

"அப்படிக் கேட்டிருக்க மாட்டார். 'அந்த நொண்டிப் பையன் ஏன் வரலே'ன்னு கேட்டிருப்பார்."

அறை சில விநாடிகளுக்கு மிகவும் மௌனமாகிவிடவே சிவு மெல்லக் கண்களை உயர்த்தினான். ஜலஜா அவனையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

"என்ன அப்படிப் பார்க்கறே?"

"உன் அஞ்சே முக்காலடி உயரம் ஒரு பொய்னு புரியவே ஆச்சரியத்தில் பார்த்தேன். நீ நிறைய வளர வேண்டியிருக்குது"

அவன் முகம் சிவக்க மௌனமானான்.

"நேத்து எங்க வீட்டுக்கு வந்திருக்கேன்னு இப்போ புரியுது. ஆனா சொல்லிக்காமல்



திரும்பிப் போயிருக்கே. நல்ல 'மானர்ஸ்' தான் இல்லே?''

''உங்கப்பா சொன்ன வார்த்தை எனக்குச் சங்கீதமா யிருந்திருக்கும்னு நினைக்கிறியா?''

''நான் முட்டாளில்லே சிவு. ஆனா ஊனம் உடம்பிலே இருக்கலாம், மனசில் இருக்கக் கூடாது.''

''உனக்கு இதைப் பத்தி ஒண்ணும் தெரியாது. பேசாதே.''

அவன் சிறிது நேரம் புத்தகத்தின் ஒரே வரியைப் பத்து முறை அர்த்தமின்றிப் படித்த பின் புத்தகத்தை மூடிமேஜைமேல் வீசினான். எதிரே இன்னொரு நாற்காலியில் உட்கார்ந்திருந்த ஜலஜாவை ஏறிட்டுப் பார்த்தான்.



''எனக்கு எதுக்கு நீ சொல்ற 'மானர்ஸ்' இருக்கணும்? மத்தவங்களுக்கு விதிச்சிருக்கிற ரூல்ஸை யெல்லாம் எனக்குப் பொருத்தக் கூடாது.''

''ஏன் கூடாது? நீயும் மத்தவங்க மாதிரி ஒரு மனுஷன்தானே? ஒரு 'கன்ஸெஷன்' வேணும்னு எதிர் பார்த்தியானால் நான் சொன்ன மனசு ஊனம் — தாழ்வு மனப்பான்மை — உனக்கு நிச்சயம் இருக்குன்னு தான் ஆகுது.''

''ரப்பிஷ்.''

''உன்னை நானும் நம்ம மத்த ஃப்பிரெண்ட்ஸும் ஒரு நார்மல் மனுஷனைத்தான் நினைச்சுப் பழகிட்டு .வரோம். நீயாத்தான் ஒரு வித்தியாசம் இருக்குன்னு அடிக்கடி நினைவு படுத்தறே.''

மூக்குக் கண்ணாடிக்குப் பின்னே அவன் கண்கள் ஆத்திரமாய் விழித்தன. ''வித்தியாசத்தை மறந்துதான் உன் அப்பாகிட்ட என்னை அப்படி வர்ணிச்சியா? கிரட்சஸ் வைத்துக்கிட்டு நடக்கிறவன்னு! அப்போ அவ்வளவுதானே? உங்கப்பா புரிஞ்சுகிட்ட மாதிரி, நொண்டிப் பையன்தானே? அப்புறம் நார்மல் கிர்மல்னெல்லாம் என்ன பேத்தல்?'' அவன் எழுந்தான். இரண்டு அடிகள் நொண்டிக் கொண்டு வந்து, தன் நாற்காலி மீது சாய்த்து வைத்திருந்த ஊன்றுகோல்களை அக்குள்களில் இடுக்கிக் கொண்டு அவன் முன்னே இப்படியும் அப்படியுமாய் நடந்து காட்டினான்.

''ஸ்டாப் இட், சிவு. நீ இவ்வளவு ஸில்லியா நடந்துக்கிறதானால் நான் எழுந்து போறேன். என் அப்பாவுக்கு உன்னைத் தெரியுமா? ஒரே ஒரு தடவை நீயும் இன்னும் சில சிநேகிதர்களுமாய் எங்க வீட்டுக்கு ஒரு லெக்சர் பத்தின டிஸ்கஷனுக்காக வந்திருந்தப்போ பார்த்திருக்கார், அவ்வளவு தானே? பரிச்சயமில்லாதவங்களைக் குறிப்பிடறப்போ பேரைச் சொன்னா புரியுமா? ஹிஸ்ட்ரி போஸ்ட் கிராஜுவேட் ஸ்டூடண்ட் அதிமேதாவி எல். வி. சிவராமன்னு சொன்னா அவர் வரைக்கும் என்ன அர்த்தம்? பழகி ஒரு பர்ஸனாலிடியானப்புறம்தான் யார் ஒருத்தருக்கும் பேரும் குணங்களும் ஏற்படுது. அதுக்கு முந்தி உருவத்தைத்தான் விவரிச்சாகணும். நீள மூக்கு சதுர மூஞ்சின்னெல்லாம் சொல்ற மாதிரிதான் நான் சொன்னதும். வெறும் வெளி வர்ணனை.''

''அப்படிப் பார்த்தாலும்... என்னைப் பத்தின முதல் வர்ணனை 'தி மேன் வித் தி க்ரட்சஸ்' அதானே? நான் எம். ஏ. முடிச்சிட்டு ரிசர்ச் பண்ணணும், டாக்டரேட் வாங்கணும், ஹிஸ்ட்ரி ப்ரொஃபஸராய் வரணும், ஊனத்தை மீறி வாழ்க்கையில சாதனை புரியணும் அது இதுன்னு ஆசைப்படறதை யெல்லாம் கேலிக்கிடமாக்கிட்டு அடிப்படையில் இருக்கிறது இந்த வர்ணனை தான். 'தி மேன் வித் தி க்ரட்சஸ்.''

ஜலஜா எழுந்து நின்றாள்.

''தன் ஊனத்தை முதல்ல ஏத்துக்கவே முடியாதவன் அதை மீறிட்டு எதையும்

சாதிக்கவும் முடியாது. நீ ஒரு நாள் உலகம் புகழும் ஹிஸ்ட்ரி அதாரிடியாய் ஆகலாம். அப்போ மட்டும் நீ ரெண்டு நல்ல கால்களோடு நார்மலாய் நடந்துடுவியா?''

அவன் உதட்டைக் கடித்துக் கொண்டு தலையைத் திருப்பிக் கொண்டான்.

அவள் குரல் மிருதுவாயிற்று. ''இந்த க்ரட்சஸ் உன் வாழ்க்கையில் ஓர் உண்மை சிவு! ஒரு ஃபாக்ட். அதை இல்லேன்னு கண்ணை மூடிட்டா இல்லேயாயிடாது. அதே சமயம் அது கேவலம் ஒரு வெளி விவரம் தான். நிஜமான சிவுவை அது மட்டுமே உயர்த்தவோ தாழ்த்தவோ முடியாதுங் கிறதையும் நீ நினைப்பு வைச்சுக்கணும். என்னைக் கேட்டால் நீ நாளை சாயங்காலமாவது டி. வி. ப்ரோக்ராம் பார்க்க எங்க வீட்டுக்கு வரலாம். ஒலிம்பிக்ஸ் காட்டறாங்க. அப்புறம் உன் இஷ்டம்.''

அவள் போய்விட்டாள்.

சிவு பல்லைக் கடித்தான். ஒரு புத்தகத்தை எடுத்துச் சுவரில் ஓங்கி அறைந்தான். கடைசியில் நொண்டி என்றுதானே சொல்லிக் காட்டுகிறாள்? இருக்கட்டும். அவன் ஒரு நாள் உலகம் போற்றும் வரலாற்றுத் துறை நிபுணனாய் ஆகத்தான் போகிறான். இப்போது மாணவனாய்ப் பயிலும் இதே கல்லூரியில் சரித்திரப் பேராசிரியனாய் இருப்பான். அவன் மாணவர்களில் ஒருவன்முகமும் கண்களும் பாராட்டில் மின்ன, ''ஸார் நீங்க ஒரு ஜீனியஸ் ஸார்'' என்று உருகி அவனது ஆட்டோகிராஃப் வாங்கிப் போவான். வீட்டில் அந்த ஆட்டோ கிராஃபைப் பார்க்கும் அவன் தாய் கண்களில் நீர் மல்க நிற்பாள். 'ஆஹா, இந்த மகா மேதையை அன்று எப்படிப் பேசிவிட்டோம்!' என்று பல ஆண்டுகளுக்கு முந்தைய இன்றைய தினத்தை எண்ணி மனம் வருந்துவாள். 'இவர் என் கூட எம். ஏ. படிச்சவர்டா!' என்று மகனிடம் பெருமையாய்ச் சொல்வாள். 'அப்பலேயிருந்தே அவர் ரொம்பப் புத்திசாலி. பரீட்சையில் எப்பவும் ஃபர்ஸ்ட் க்ளாஸ்!' அவள் புகழ்வதைக் கேட்டு அவள் கணவனின் கண்களில் பொறாமை கூடத் தோன்றும். 'சிவு, உன் மதிப்பைப் புரிஞ்சுக்காம அன்னிக்குப் பேசிட்டேன், என்னை மன்னிச்சிடு' என்று அவன் காலில் — ஆம், அவன் நொண்டிக் காலில் — விழுவதற்கு மறு நாள் விரைந்து வருவாள். ஆனால் அவன் இருக்க மாட்டான். ஹார்வர்ட் யூனிவர்ஸிடியில் விஸிட்டிங் ப்ரொஃபஸராய்ப் பணியாற்ற மேற்கொள்ளும் பயணத்தின் முதல் கட்டமாக டெல்லிக்குப் போக அன்று விடியற்காலையிலேயே மீனம்பாக்கத்தில் விமானமேறியிருப்பான்...

அழுகை முட்டிக் கொண்டு வந்தது.

**ம**றுநாள் அவனுக்கு மூன்று வகுப்புகள் இருந்தன. அவன் முதல் வகுப்புக்கு மட்டும் தான் போனான். அங்கும் ஜலஜாவின் பக்கமே திரும்பவில்லை. தெரிந்துகொள்ளட்டும், அவன் கோபமாய் இருக்கிறான் என்று... அந்த எண்ணம் சிறிது திருப்தி அளித்தது. பிற்பகல் முழுவதும் லைப்ரேரியில் கழித்தான்.

மாலையில் அவள் வீட்டுக்கு அவன் போகவில்லை. டி. வி.யில் ஒலிம்பிக்ஸ் ஆட்டங்கள் பார்க்க அழைக்கிறாளாம். 'ஹாக்கி உனக்குப் பிடிக்குமே, இந்தியா எப்படி விளையாடியதென்று வந்து பார்' என்றுதான் அதற்கு அர்த்தம் என்று அவன் நினைத்துக்கொண்டு விடுவானோ? அவ்வளவு முட்டாளா அவன்? 'மற்றவர்கள் ஓடியாடி விளையாடுவதைப் பார்க்கத்தானே முடியும் உன்னால்' என்பது தான் அர்த்தம். புரியாதாக்கும்!

வழக்கமாக வெளியே சென்று வருவதைப் போல் அன்று மாலை அவன் போகவில்லை. விடுதியிலேயே இருந்தான். தன் அறையில் இல்லாமல் தொலைபேசி வைத்திருந்த ஹாலில் ஒரு சக மாணவனுடன் 'கேரம்' விளையாடியபடி உட்கார்ந்திருந்தான். கண்கள் ஆட்டத்துக்கு, காதுகள் டெலிபோனுக்கு.

மணி ஏழாகப் போகிறதே... ஃபோன் வராதா?

இதோ! ட்ரிங்... ட்ரிங்.... ட்ரிங்...

பி. ஏ. மாணவன் ஒருவன் சென்று ரிசீவரை எடுத்தான். ''ஹலோ!''

சிவுவின் விரல்கள் ஸ்ட்ரைக்கரோடு ஒட்டிக் கொண்டன.

''...ம், கூப்பிடறேன். ப்ளீஸ் ஹோல்டான்....

நான் எழுந்திருக்க மாட்டேன்....

''ஆடேண்டா சிவு. காயைக் குறி பார்க்கிறியா, அழகு பார்க்கிறியா?''

அந்த மாணவன் மாடிப் படிகளை அண்ணாந்து பார்த்து, ''ரமேஷ், உனக்கு ஃபோன் வந்திருக்குது'' என்று குரல் கொடுத்தான்.

சிவுவின் உடல் சட்டென்று தொய்ந்தது. ஸ்ட்ரைக்கரை இயக்கினான். காய் பையில் விழவில்லை.

''என்ன சிவு, இவ்வளவு சிம்பிள் ஷாட்டை மிஸ் பண்ணிட்டியே!''

சிறிது நேரத்தில் மீண்டும் தொலைபேசி மணி அடித்தது. அவன் உடல் விறைத்துக் கொண்டது. அவனுடன் ஆடிக் கொண்டிருந்தவன் எழுந்து ஃபோனிடம் சென்றான்.

---

ட்ரூமன் ஜனாதிபதியாக இருந்த போது, அவருடைய வாசக சாலையிலிருந்து அடிக்கடி புத்தகங்கள் காணாமற் போய்க் கொண்டிருந்தன. கடைசியில் ட்ரூமன் அதற்கு ஒரு கௌரவமான மருந்து கண்டுபிடித்தார். எல்லா புத்தகங்கள் மீதும் 'ஜனாதிபதியின் அன்பளிப்பு' என்று அச்சடித்து ஒட்டிவிட்டார். -பிரியாபாலு






''குடிகாரனின் பிள்ளை 'விஸ்கி விஸ்கி' அழுதால், அரிசி வியாபாரியின் பிள்ளை 'நொய் நொய்' என்று அழும். -கோவி. பரம்

''எனக்காயிருந்தால் நான் படுத்துக்கப் போயிட்டேன்னு சொல்லு—யாராயிருந்தாலும்தான்.''

அவனுக்கு இல்லே.

அதன் பின் டெலிபோன் மணி அடிக்கவில்லே.

டெலிபோன் செய்யாமலே இருந்து விட்டாளே! 'டி. வி. பார்க்க ஏன் வரவில்லே? கோபித்துக் கொள்ளாதே, ஐம் ஸாரி. ஆட்டத்தை வந்து பார்' எதுவுமே இல்லே. எத்தனே அலட்சியம்!

என்னேச் சமாதானப்படுத்தாமல் இருக்கலாமா? என்னிடம் கடுமை காட்டலாமா? மற்றவர்களின் கரிசனம் என் பிறப்புரிமை இல்லேயா?

அந்த வாரம் முழுவதும் ஜலஜா என்று ஒரு நபர் வகுப்பறையில் இருந்ததாகவே அவன் காட்டிக் கொள்ளவில்லே. அவள் ஒருமுறை அவனேப் பார்த்துப் புன்னகை செய்தபோது பார்வையை விலக்கிக்கொண்டான். ஆனால், அண்மைக் கால உலக வரலாறு பற்றிய ஒரு கேள்விக்கு அவன் எழுதியிருந்த விடையைப் பேராசிரியர் அதன் ஆய்வு நுட்பத்துக்காக வகுப்பறையில் பாராட்டியபோது, அவன் ஏறிட்டுப் பாராத அந்த ஜலஜாவின் இருப்பு ஒன்றே உணர்வு அனைத்தையும் நிறைத்தது.

என் தகுதியைப் பார்த்தாயா? ஊனத்தை வென்ற என் திறமையைப் பார்த்தாயா?

தன் பராமுகத்தைப் பொருட்படுத்தாமல் அவள் வலிய வந்து பேச வேண்டுமென்று அவன் எதிர்பார்த்தான். அவள் வரவில்லே.

என் குறையை மட்டும் சொல்லிக் காட்டினளே! எனக்கு விட்டுக் கொடுக்க வேண்டாமா? எனக்கு! எனக்கு!

**ஹ**வுஸ் ஃபுல்லா?

நல்லவேளே, இன்னும் அப்படி ஆகவில்லே. இரண்டு தொண்ணூறு டிக்கெட் ஜன்னலுக்கு முன் வரிசை நீளமாய்த் தெரிந்தது. அவன் போய்க் கடைசியில் நின்று கொண்டான்.

சனிக் கிழமை பிற்பகல் நாலு மணி காட்சிக்காக இப்போதே இந்த க்யூ. ஊரைப் பித்தாக்கியுள்ள வெற்றித் திரைப் படம். நான்கு மாதங்களுக்குப் பிறகும் ஒவ்வொரு காட்சிக்கும் அரங்கம் நிறைந்துவிடும். இன்று கூட டிக்கெட் கிடைக்கிறதோ இல்லேயோ? அவனுக்கு வேர்த்தது. கண்ணுடியைக் கழற்றி அதையும் முகத்தையும் கைக்குட்டையால் ஒற்றிய பிறகு மீண்டும் அணிந்துகொண்டான். வரிசை தொடர்ந்தது.

வரிசையில் சிலர் அவனேயே பார்த்தனர். முன்னேயும் பின்னேயும் தலேகள் அவன் திசையில் திரும்பின. அவன் முகம் சிவந்தது. பின்னும் அதிகமாக வேர்த்தது. மூக்குக் கண்ணுடி மங்கியது. மறுபடியும் துடைத்துக் கொண்டான். கை வேர்வை ஊன்றுகோல்களின் பிடிகள் மீது பளபளத்தது.

அவனுக்கு முன்னுல் நின்றிருந்த மூவர் தமக்குள் கசமுசவென்று ஏதோ பேசிக்கொண்டார்கள். பிறகு அவர்களில் கடைசியாக இருந்த நடுத்தர வயது ஆசாமி— அவனுக்கு முந்திய இடத்தினர்—திரும்பி அவனேப் பார்த்துப் புன்முறுவலித்தவாறே ''நீங்க முன்னுலே போய் நின்னுக்குங்க தம்பி'' என்றுர்.

சிவு வியப்படைந்தான். ''என்ன?''

''மூணு இடம் முன்னுலே போங்க. எங்க மூணு பேருக்கும் ஆட்சேபமில்லே.''

''பாவம், வெயிலாயிருக்குதில்லே'' என்றுன் அவருக்கு முன் நின்றிருந்த வாலிபன். அவனுக்கும் முன்பாக இருந்தவர் எதுவும் சொல்லாமல் தலேயைத் திருப்பிச் சிவுவைப் பார்த்துப் புன்னகை மட்டும் செய்தார்.

''வெய்யில்ல நிக்கறது எங்களுக்கே கஷ்டம். பாவம், உங்களுக்கு எப்படி இருக்கும். அதான் கொஞ்சம் சீக்கிரமே உங்களுக்கு டிக்கட் கிடைக்கட்டும்னு...'' கண்கள் அவன் கால்மீது இறங்கின.

''முன்னுல போங்க தம்பி.'' இந்த ஜோடிக் கண்களும் அவன் கால் மீதுதான். மூன்றும் இடத்துப் புன்னகையும் அவன் கால்களுக்கு.

''ம், போங்க, எங்களுக்குத் தடையில்ல.''

எத்தனே நல்லவர்கள்! அவன் முன்னேறினன்.

''மெள்ள, மெள்ள!''

''பார்த்துப் போங்க.''

''த்லொ த்லொ த்லொ!''

அத்தனே தலேகளும் அவன் பக்கம். காந்தம் ஈர்க்கும் இரும்புத் துண்டுகள்.

எத்தனே நல்லவர்கள்! திடீரென்று அந்த எண்ணத்தை வெட்டிக்கொண்டு ஒரு சங்கட உணர்வு பீரிட்டது. இத்தனே பார்வைகளும் தன் கால் மீது இறங்கும் கனத்தைத் தாளமுடியவில்லே. உதட்டைக் கடித்துக் கொண்டான். பதற்ற மிகுதியினுல் உடல் கண நேரம் தள்ளாடி விட்டதா? ஒரு கரம் அவன் தோளேப் பற்றியது. ''மெதுவா, தம்பி! நான் பிடிச்சுக்கிட்டு நிக்கட்டுமா? நடக்க முடியுதா உங்களுக்கு?''

''ம்ம், தோளே விடுங்க. எனக்கொண்ணும் இல்லே.'' எரிச்சலேக் குரலில் காட்டாதிருப்பது பெரும் பிரயாசையாய் இருந்தது. ''நன்றி'' என்ற சொல் ஒருவசை போல் விழுந்தது.

''ஐயோ பாவம், இவங்களுக்கெல்லாம் ரொம்பக் கஷ்டம்.''

''என்னவோ ஆண்டவன் இப்படிப் பண்ணிடருன்....''

அவன் முகம் இறுகியது.

திருப்தியா? இப்போது திருப்திதானே? இதுபோன்ற சலுகையும் கரிசனமும்தானே அவன் விரும்பினான்? பின்னே ஏன் இந்த எரிச்சல்? மீண்டும் தன் முகத்திலும் கழுத்திலும் ரத்தம் ஏறுவதை அவனால் உணர முடிந்தது. உடல் முழுவதுமே தகித்தது.

டிக்கெட் வாங்கிக் கொண்டு உள்ளே போனான். அரங்கமே கணப் பொழுது நிசப்த மாகி அவனை வெறிப்பதுபோல் இருந்தது. குனிந்த தலையுடன் வேகமாய்த் தன் இருக்கை நோக்கிச் சென்றான். தரை மீது ஊன்று கோல்களின் ஒலி இடி முழக்கம் போல் அவன் காதில் கேட்டது. நல்ல வேளையாக அவனுடையது ஓர நாற்காலி. மெல்ல உட்கார்ந்துகொண்டு ஊன்று கோல்களை ஒன்றாய் இணைத்து யாருக்கும் தொந்தரவு இல்லாமல் நாற்காலி வரிசைக்கு அடியில் தள்ளினான்.

மேலே படிந்திருந்த வேர்வையால் குளிர் சாதன அறைக்குள் சட்டை சில்லிட்டது. மீண்டும் முகத்தைத் துடைத்துக் கொள்ள இருந்தவன் தனது பக்கத்து நாற்காலியில் அமர்ந்திருந்தவரின் முக பாவத்தைக் கண்டு தடைப்பட்டான். அந்த முகத்தில் ஒரு கணக்கம். அவர் ஒரு கணம் சிவுவைத் திரும்பிப் பார்த்துவிட்டுத் தமது மறு பக்க நாற்காலியில் அமர்ந்திருந்தவரிடம் ''எனக்கு இங்கே ஸ்கிரீன் சரியாத் தெரியலே ஸார். முன் சீட்காரர் தலை மறைக்குது. நீங்க உயரமா இருக்கீங்க, உங்களுக்கு மறைக்காது. நாம ரெண்டு பேரும் இடம் மாத்திக்கலாமா?'' என்று கேட்டு, மற்றவர் சம்மதித்ததும் முகத்தில் ஆறுதல் தெரிய உடனே எழுந்து இடம் மாற்றி உட்கார்ந்தார்.

அந்தப் பிரபல வெற்றித் திரைப்படத்தில் என்ன பார்த்தோமென்றே சிவு உணரவில்லை.

அந்த இரக்கம், இந்த வெறுப்பு — இரண்டுமே அவன் உடற் குறைக்குத்தானே? எனக்கு இரண்டுமே பிடிக்கவில்லை. நான் இவை இரண்டினால் மட்டுமே உணரப்பட வேண்டியவன் இல்லை. இந்த ஊனம் மட்டுமே நானில்லை!

முதல் முறை ஜலஜாவோடு தனிப்பட்ட முறையில் பரிச்சயம் நேர்ந்த தினம் அவனுக்குத் திடீரென்று நினைவு வந்தது.

அஸெம்பிளி ஹாலில் அவனைத் தேடி அவள் வந்தாள். ''எக்ஸ்க்யூஸ் மீ. நான் உங்க சக மாணவி. பெயர் ஜலஜா. உங்களுக்குத் தெரிஞ்சிருக்கும்னு நினைக்கிறேன். இன்னிக்கு மத்தியானம் நடந்த லெக்சர்லே எனக்கு ஒரு சந்தேகம். உங்களுக்கு ஸப்ஜெக்டல எல்லாரையும் விட நல்ல கிராஸ்ப் இருக்கிறதைக் கவனிச்சு இருக்கேன். கொஞ்சம் என் சந்தேகத்துக்கு விளக்கம் சொல்ல முடியுமா?''

''ஓ, அதுக்கென்ன, எனக்குத் தெரிஞ்சதைச் சொல்றேன்'' என்றான் அவன் வெட்கமும் கிளர்ச்சியும் தன் ஊன்று கோல்கள் பற்றிய தீவிர உணர்வுமாக.

''ரொம்ப தாங்க்ஸ்.''

''எதில சந்தேகம்? யூரோபியன் ஹிஸ்ட்ரியா?''

''இருக்கட்டும். முதல்ல உக்காருவோம்.''

அவனுக்குச் சௌகரியமாக இருக்கும் என்றுதான் அவள் அதைச் சொன்னாள் என்பது புரிந்தது. அவன் கழுத்தில் சூடேறியது. ஆனால் அவன் உட்கார்ந்த பிறகு அவள் அவனது காலையே மறந்து விட்டாள். அருகில் உட்கார்ந்து சகஜமாகப் புத்தகத்தைப் பிரித்துச் சந்தேகம் கேட்டாள். விளக்கங்கள் முடிந்த பின் புன்முறுவலோடு ''ரொம்ப தாங்க்ஸ் மிஸ்டர் சிவராமன். எனக்கு ரொம்ப உதவியாயிருந்தது. நீங்க சொன்ன தெல்லாம்'' என்று அவனை மேலும் கீழுமாகப் பார்க்காமல் நேராக முகத்தைப் பார்த்துச் சொல்லிவிட்டு விடை பெற்றுக் கொண்டாள். அந்த அறிமுகத்திலிருந்துதான் நட்பு பிறந்தது.

'இந்த ஊன்றுகோல்கள் உன் வாழ்க்கையில் ஓர் உண்மை. அவை இல்லை யென்று கண்ணை மூடிக்கொண்டால் இல்லையாகி விடாது. அதே சமயம், அவை கேவலம் ஒரு வெளி விவரம்தான். நிஜமான சிவுவை அவை மட்டுமே உயர்த்தவோ தாழ்த்தவோ முடியாது.'

இடைவேளையிலேயே எழுந்து வெளியே வந்தான். ஹாஸ்டலை அடைந்ததும் நேரே தொலை பேசியிடம் சென்றான். மூக்குக் கண்ணாடியைச் சரியாய் நிமிர்த்தி விட்டுக் கொண்டு, தனக்குச் சலுகையை மறுத்துச் சமத்துவம் அளித்தவளின் எண்ணைச் சுழற்றினான்.

''ஹலோ!''

''ஹலோ! மிஸ் ஜலஜாவோட பேச முடியுமா''

''நீங்க யாரு''

''பேசறது அவள் அப்பாவா?''

''ஆமாம்.''

''குட் ஈவ்னிங் ஸார். நான் அவள் ஃப்ரெண்ட் சிவராமன். அன்னிக்கு ஒரு நாள் டி. வி. ப்ரோகிராம் பார்க்க உங்க வீட்டுக்கு வரேன்னு சொல்லிட்டு வராமப் போயிட்டேன். ரொம்ப ஸாரி.''

''ஓ, அந்த....'' சட்டென்று நிறுத்தினார்.

''ஆமாம்.'' இமைப் பொழுது நிறுத்தி உமிழ் நீரை விழுங்கிக் கொண்டான். ''இ மேன் வித் இ க்ரட்சஸ்!' உங்க மகள் வீட்ல இருந்தால் கொஞ்சம் கூப்பிட முடியுமா? சிவுன்னு சொன்னா அவளுக்குத் தெரியும்.''

''லைன்ல இருங்க, வரச் சொல்றேன்.''

அவளிடம் என்ன பேசுவது? அது முக்கியமில்லை. ஜலஜா என்ற மனுஷியுடன் சிவு என்ற மனிதன் பேசுகிறான் என்பதுதான் முக்கியம்.

---

''முன்னெல்லாம் ஒருத்தர் பல பெண்களை மணம் செய்து கொண்டாங்களே, இப்ப ஏன் அப்படி இல்லே?''

''இப்ப ஒருத்திக்கே பணிவிடை செய்ய முடியலியே!''

-பி.பி. சம்பத்



# பாதுகாப்பு, சிக்கனம், இரண்டிற்கும்—
# ஸ்டேன்ஸ் டயர் ரீடிரெட்

சாலைப்பிடிப்பு, நீடித்த உழைப்பு, தோற்றம், கணிசமான சிக்கனம் எல்லாம் சேர்ந்து அமைய—ஸ்டேன்ஸ் டயர் ரீடிரெட்.

**ஸ்டேன்ஸ்டயர்**

அண்டு ரப்பர் பிராடக்ட்ஸ் லிமிடெட்
திருச்சி ரோடு, கோயம்புத்தூர் 641018.

தொழிற்சாலைகள் :
கோயமுத்தூர் ● கோட்டயம் ● விஜயவாடா ● திருச்சி ● கள்ளிக்கோட்டை ● மங்களூர் ● வேலூர் ● ஹைதராபாத் ● சேலம் ● எர்ணாகுளம் ● தூத்துக்குடி ● திருச்சூர் ● மதுரை ● பெங்களூர் ● பெல்லாரி மற்றும் காகிநாடா.











MAC/ST/002/TAM

**நினைவு அஞ்சலி**



திருமங்கலம் (லால்குடி)

## T. S. RAJU IYER

| தோற்றம் | மறைவு |
|---|---|
| 5-12-1890 | 25-12-1978 |

Inserted by Ever Loving

Smt. Vembu Ammal Wife
R. Srinivasan Son
Smt. Janaki daughter-in-law
H/247 DDA, Naraina, New Delhi
R. Chandrasekharan Son
Smt. Padma daughter-in-law
E-46/Block 16 Neyveli

# மறுவாழ்வு இல்லம்

வேலை செய்யும்போது கிணற்றில் விழுந்ததால் இரண்டு காலும் ஊனமாகிப்போன சின்னப் பையன், மன வளர்ச்சி குன்றிய ராமகிருஷ்ணன், மதுரை ரைஸ் மில்லில் வேலை செய்யும்போது பதினெரு வயதிலேயே வலது கையை இழந்த ராமு, போலியோ நோயினால் வலது கால் ஊனமுற்ற தனராஜ், பார்வையிழந்த ஆலன், ராமசாமி—

உடல் ஊனமுற்றோருக்கு மறு வாழ்வளிக்கும் இல்லத்தில் இவர்களைச் சந்திக்கிறோம். ராயப்பேட்டை முத்தையா முதலித்தோட்டத் தெருவில் அமைதியாகப் பணிகள் நடைபெற்று வரும் இந்த இல்லத்தில்சூபரின் டென்டெண்ட இளைஞர் ரமேஷ், தையல் பயிற்சி, பாய் முடைதல், துணி நெய்தல், இன்ஜினீயரிங், கடித உறைகள் தயாரிப்பு ஆகிய பகுதிகளுக்கு ஆர்வத்துடன் அழைத்துச் சென்று விவரிக்கிறார்.

பார்வையற்றோர், கை-கால் ஊனமுற்றோர் மன வளர்ச்சி குன்றியவர் என்று மொத்தம் 22 பேர் இங்கே பயிற்சி பெறுகிறார்கள். பயிற்சிக்குப் பிறகு சொந்தமாக வெளியில் தொழில் அமைக்கும் மனத் திடம் இருக்கிறதா என்ற கேள்விக்கு, புன்னகையும், நம்பிக்கையும் வெளிப்பட, ஆம் என்று பதில் அளிக்கின்றனர் இவர்கள்.

பதினறு வயதிலிருந்து இங்கே பயிற்சிக்குச் சேர்த்துக் கொள்வதாகச் சொன்னார் ரமேஷ்.

எழும்பூர் காலா மேஜர் சாலையில் இருக்கும் கில்டு அஃப் சர்வீஸில் இயங்கும் தமிழ் நாடு உடல் ஊனமுற்றோர் மறு வாழ்வுக் கழகத்தின் வேலை வாய்ப்பு அதிகாரி இவர்களை இங்கே பயிற்சிக்கு அனுப்புகிறார். (கிண்டியில் செயல்படும் ஊனமுற்றோர் வேலை வாய்ப்பு நிலையமும், சென்னை கே. கே. நகரில் இயங்கும் செயற்கை உறுப்புக்கள் தயாரிப்பு நிலையத்தில் பணி புரியும் வேலை வாய்ப்புத் தகவல், ஆலோசனை அதிகாரியும், இதே நிலையத்தின் முழு நேர சமூக ஊழியரும் இவர்கள் விஷயத்தில் உதவுவதாகத் தெரிவித்தார் ரமேஷ்.)

இவர்கள் தயாரிக்கும் பொருட்களை நியாயமான சகாயமான விலைக்கே விற்கிறார்கள். தயாரிப்புக்களும் தரமானவையாகவே இருக்கின்றன.

லயன்ஸ் கிளப், சென்னை போர்ட் அன்ட் டாக் ஒர்க்கர்ஸ் சொஸைடி போன்றவை சக்கர நாற்காலியும், செயற்கை உறுப்புகளும் வழங்கியிருக்கின்றன. ஏன், மாணவர் யூனியன் என்றால் ஸ்டிரைக், கலாட்டா, தேர்தல், ரகளை என்று மட்டுமே பழகிப் போன நமக்கு லயோலா கல்லூரி மாணவர் யூனியன் கூட ஒரு சக்கர நாற்காலியை இந்த நிறுவனத்துக்கு வழங்கியிருக்கிறது என்ற செய்தி வியப்பையும் மகிழ்ச்சியையும் அளிக்கிறது.

''இவர்களுக்குள் காணப்படும் பாச உணர்வும், பரிவும் கண்டு நான் பொறாமைப்படுகிறேன். அவ்வளவு அந்நியோன்யம்!'' என்கிறார் ரமேஷ்.

மத்திய அரசு, ஸ்டேட் பாங்க் அஃப் இந்தியா ஆகியவை பல விதங்களில் கிராண்ட் வழங்கியிருக்கிறது இவர்களுக்கு. ஊனமுற்றோருக்காகவே இரும்பினால் ஆன பெட்டிக் கடை (Bank) இங்கே தயாரிக்கப்படுவதைக் காண்பித்தார் ரமேஷ்.

இந்த ஆண்டே அண்ணா நகரில் உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்கான தனி மறு வாழ்வு இல்லம் அமைக்க எல்லா முயற்சிகளும் எடுக்கப்பட்டு வருவதாக அறிந்தோம்.

இளைஞர் ரமேஷிடம் ஒரு கேள்வி கேட்டோம்: ''எல்லோரையும் நன்றியுடன் குறிப்பிட்டீர்களே? உங்களுக்குக் குறைகள் யார் மீதும் இல்லையா?''

சற்றுத் தயங்கினார் ரமேஷ்.

''இந்த இளைஞர் சின்னப் பையன் டைப்ரைட்டிங்கில் ஹையர் தேறியவர். பள்ளி



இறுதி வகுப்பும் பாஸ் செய்தவர். டெய்லரிங்கில் நன்கு தேறியவர். இருந்தும், மூன்று சதவீத ரிசர்வேஷன் அரசாங்க வேலைகளில் இவர்களுக்காக ஒதுக்கியிருந்தும் இன்னும் இவருக்கு நிரந்தரமான வேலை எதுவும் கிடைக்கவில்லையே என்ற மனக்குறை எனக்கு உண்டு!''

தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் ஊனத்தின் பாதிப்பைக் காட்டிக்கொள்ளாமல், கடமையே கண்ணாயிருக்கும் இவர்களைப் பார்த்து நமக்குள் ஒரு கேள்வி எழுகிறது. எல்லா உறுப்புகளும் நன்கு செயல்பட்டு வளைய வரும், நாம், கவலைகளுக்கு மாய்ந்து போகலாமோ?

போட்டோ : சுபா நியூஸ் —தமயந்தி—சாருகேசி

மேற்கு ஜெர்மனி







மேற்கு ஜெர்மனி

'ஊனமுற்றோருக்குப் பொதுஜனத் தொடர்பு பணி' என்ற நாடகத்தில் ஆசிரியரும் நாடக அரங்க மானேஜருமான டாக்டர் பீட்டர் ராட்கே. (சக்கர நாற்காலியில்)

மேற்கு ஜெர்மனி

உடல் ஊனமுற்றோர் இந்த 'ஆடும்' மேஜையில் (Sling table) எங்கே அமர்ந்தாலும் அவருக்கு 'அசைவு' உண்டு. இந்த ஆடும் மேஜையில் அமர்ந்தால்

# ஒரு சர்வ

ரிட்டன்

அவர்களுக்குத் தேவையான உடல் பயிற்சி
ஊட்டுகிறது.

ஜப்பான்

உடல் ஊனமுற்ற மாணவர்
உயர்நிலைப் பள்ளியில் தேறிய பிறகு பின்னல்
தையலில் மூழ்கியிருக்கிறார்.

பிரிட்டன்

லண்டனில் உள்ள நான்கு வயது காது
கேளாத சிறுவர் சிறுமியருக்கு
விசேஷமாக நவீன கருவிகள் அடங்கிய
வகுப்பறைகள்.

அமெரிக்கா

அமெரிக்காவில் உடல் ஊனமுற்ற
குழந்தைகளுக்கு நல்வாழ்வு தரும் வைத்திய
சாலையில் பயிற்சி முறை.

# சப் பிரச்னை





கொஞ்சம் மழை பெய்து முடிந்த பிறகு ஒரு மரத்தின் அடியில் நின்று கொண்டு; அதன் கிளைகளைப் பிடித்து உலுக்குகையில் சொட்டுச் சொட்டாக நீர்த் துளி கீழே விழுகையில் சில முதல் துளிகள் தலையிலும், முதுகிலும் முத்தம் இடுகையில் ஏற்படும் சிலிர்ப்பு எனக்கு மிகவும் பிடிக்கும்; விடியற்காலை ஐந்தரை மணிக்குச் செல்லும் பஸ்ஸின் ஓரத்துச் சீட்டில் உட்கார்ந்து கொண்டு, முகத்தோடு உறவாட வரும் குளிர்காற்றை ரசிப்பது மிகவும் பிடிக்கும். விடிந்ததும் விடியாததுமான வேளையில் புல் தரையில் நடந்து, புல்லின் உடல்கள் மேல் குடி-கொண்ட பனித் துளிகள் உள்ளங்கால்களை இதமாக வருடிக் கொடுப்பதை ரசிப்பது எனக்குப் பிடிக்கும்; எஸ். பாலசந்தரின் வீணையில் இருந்து கிளம்பும் இன்னொலியை என்ன ராகம் இது என்று குழப்பிக் கொள்ளாமல் கேட்பது எனக்குப் பிடிக்கும்.

இவையெல்லாம் ஹரிணிக்கும் பிடிக்கும்.

சுற்றியிருந்த காகிதத்தைப் பிரித்தேன். பக்கத்தில் நின்று கொண்டு மங்களா பார்த்துக் கொண்டிருந்தாள். நான் உள்ளே இருந்த படத்தை எடுத்துக் கையில் வைத்துக்கொண்டேன்.

யாரோ ஓர் ஓவியன் அதை அனுபவித்து வரைந்திருந்தான். அந்த ஓவியன் பெயரைக் கேள்விப்பட்டதாகக்கூட ஞாபகம் இல்லை. எப்படியோ ஒரு கடையில் கண்களில் பட்டது. உடனே வாங்கி வந்துவிட்டேன்.

ஓவியன் வரைந்திருந்தது எல்லாம் ஒரு புல் தரையை மட்டும்தான். மழை தூறிக் கொண்டிருந்த வேளையில், அந்தப் புல் தரையில் பின்னிக் கொண்டிருந்த பளபளப்பை அப்படியே படத்தில் கொண்டு வந்திருந்தான். உயரமாக இருந்த சில புல்கள் அப்படியே வணக்கத்துடன் குனிந்து கொண்டு....ஓ ஓவியனே! உன் கண்கள் விசேஷமானவை!

இதை ஹரிணியும் நானும் முதலில் ஒரே சமயத்தில் பார்த்தோம். ஹரிணி இடத்தை விட்டு அசையவே மறுத்து விட்டாள். ''ஓ, வத்ஸ்! அந்தப் புல் தரை அப்படியே சுவரில் முளைச்ச மாதிரி இல்லே, உங்களுக்கு? அப்படியே ஓடிப்போய் அந்த மழையில் நிக்கணும் போல இருக்கு, எனக்கு! உங்களுக்கும் அப்படித்தான் இல்லையா?'' என்று சொல்லிச்சொல்லி மாய்ந்து போனாள்.

''இது என்ன விலை'' என்றாள் மங்களா. நான் அவளை நிமிர்ந்து பார்த்தேன். சட்டென்று ஒரு அலுப்பு வந்து என்னுடன் ஒட்டிக் கொண்டது.

''மங்களா, நீ விலையைத்தான் கவனிக்கறயா? அதோட கலையழகு உன் கண்ணுல படலியா?''

மங்களா உதட்டைப் பிதுக்கினாள்.

''இதுல எழுபது ரூபாய் கொடுத்து ரசிக்கற மாதிரி என்ன இருக்கு? உபயோகமா ஏதாவது நாற்காலி வாங்கிப் போட்டிருக்கலாம்!''

நான் தோல்வியில் துவண்டேன்.

''லுக் மங்களா... நீ கவலைப்பட வேண்டிய அவசியமே கிடையாது. இது என் ஃப்ரெண்ட் ஒருத்தருக்காக வாங்கினது. நாளைக்கு அவனிடம் கொடுத்துடணும்.''

அவள் என்னை ஒரு தடவை நிமிர்ந்து பார்த்துவிட்டு, உள்ளே போனாள்.

எனக்கு ஹரிணியை முதலில் பார்த்த ஞாபகம் வந்தது.

கண்ணாடிக் கூண்டுக்குள் அடைபட்டிருந்த அது சுருட்டிக் கொண்டு சாதுவாகப் படுத்துக் கொண்டிருந்தது. அதன் முன்பு கூண்டுக்கு வெளியே நின்றுகொண்டு அதையே பார்த்துக் கொண்டிருந்தேன். திடீரென்று திரும்பிப் பார்த்தபொழுது அவளும் அதையே மற்றொரு பக்கத்தில் நின்று கவ



னிப்பதைப் பார்த்தேன். அவன் நிமிர்ந்து என்னைப் பார்க்கும்வரை அவனையே பார்த்துக்கொண்டிருந்தேன். என்னைப் பார்த்தவன் கொஞ்சம் திகைத்தான். நான் அவனருகில் சென்று நின்றேன்.

''ஹலோ...''

''ஹலோ...'' என்ருன் அவன் கொஞ்சம் தயங்கிவிட்டு.

''நான் மட்டும்தான் கிறுக்குத் தனமா இந்தப் பாம்பையே கவனித்துக் கொண்டிருக்கேன்னு நினைச்சேன். ஹூ ஙீ?''

''ஓ!'' — அவள் தன் குரலில் கொஞ்சம் நிம்மதியைக் காட்டினுள்.

''தனியாக என்ன ரசிக்கிறீர்கள்?'' என்றேன்.

''நான் எப்பவுமே தனிதான்... ஏனென்ருல், என்னுடைய ரசனைகள் எல்லாம் பெக்யூலியர். வேறு யாருக்கும் அம்மாதிரி இருக்காதுன்னு நினைக்கிறேன்...''

எனக்கு வியப்பாக இருந்தது. கூடவே சந்தோஷமாக இருந்தது.

''உதாரணமாக....''

''இதோ இந்தப் பாம்பு சுருட்டிக் கொண்டு படுத்திருக்கிறதே, இந்தக் காயிலைக் கவனித்தீர்களா? வட்டத்துக்குள் வட்டமாக... ஐ மீன் எல்லாம் கான்சென்டரிக் சர்க்கிள்ஸா அல்லது ஒரே கோடு வட்டத்துக்குள் வட்டமாவான்னு கொஞ்சம் சந்தேகம் வரபடி...''

''மிஸ் உங்கள் பெயர் என்ன?''

ஒரு நிமிடம் நிமிர்ந்து பார்த்தவள் கொஞ்சம் யோசித்தாள்; அப்புறம் ''ஹரிணி'' என்ருள்.

''நான் வத்ஸன்... ஸ்ரீவத்ஸன்!'' என்றேன். அவள் என் அறிமுகத்தை ஏற்றுக் கொண்டவள் போல் மிருதுவாகத் தலையை அசைத்தாள்.

''மிஸ் ஹரிணி... இத்தனை நேரம் அதே மாதிரி யோசனையில்தான் இருந்தேன்னு சொன்னுல், என்ன நினைப்பீங்க?''

அவள் கண்களில் சட்டென்று வியப்பு வந்து குடி கொண்டது.

''ஓ... ஐ'ம் த்ரில்ட்...''

''ஏன் மிஸ் ஹரிணி?''

''என்னை மாதிரியே ஒரு பைத்தியக்காரரைப் பார்த்ததால்.... மிஸ்டர் ஸ்ரீவத்ஸன்''

நான் மெல்லமாகச் சிரித்தேன்.

''ஐ திங்க்... மிஸ்டர் போட வேண்டியதில்லை, ஹரிணி. தவிர என்னை வத்ஸ் என்றே கூப்பிடலாம்.''

''அஃப்கோர்ஸ் வத்ஸ்!''என்ருள் ஹரிணி.

அதன் பிறகு அடிக்கடி சந்தித்தோம். அவள் தன்னைப் பற்றிச் சொன்னுள். நான் ஓர் அலுவலகத்தில் வேலை பார்ப்பதைப் பற்றிச் சொன்னேன்.



# புரிஞ்சுகொள்பவர்கள்

திருமணமான புதிதில் ஒரு நாள் நான் மங்களாவுடன் புடவைக் கடைக்குப் போனேன்.

''மங்களா, இந்தப் புடவையை எடுத்துக்கொள். ப்யூட்டிஃபுல் டிசைன்...''

அவள் புடவையின் மேல் விரிப்பை விலக்கி, உள்ளே கவனித்தாள். — விலை விவரத்தை. எனக்கு என்னவோ மாதிரி இருந்தது.

''இந்தப் புடவை நல்லா இருக்கா?''

நான் அவள் காண்பித்ததைப் பார்த்தேன்.'' 'ஓ நோ, மங்களா! உன்னுல் எப்படி இந்த மாதிரி மட்டமான செலக்ஷன் செய்ய முடிகிறது?'

''ஓகே, உனக்குப் பிடித்தால் சரி'' என்றேன். அஃப்கோர்ஸ், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மாதிரி கவைகள். புடவையை மடித்துக் கவரில் போட்டுத் தந்தான். மங்களாவும் நானும் நடந்தோம்.

பில்லைக் கொடுத்து விட்டுக் கடையை விட்டு இறங்கும்போது, அவள் கேட்டாள்:''நீங்க காண்பிச்ச டிசைன் நன்ருத்தான் இருந்தது. எனக்கும் ரொம்பப் பிடிச்சது.''

நான் அவளைத் திரும்பிப் பார்த்தேன்.

''பின் ஏன் அதை எடுக்கலே?''

''அம்மாடி! அதோட விலே, இதைவிட முப்பத்தாறு ரூபாய் ஜாஸ்தி. இனைப் படிக்குத்தானே – இந்தப் புடவை கட்டிக் கப்போறேன்.''

நான் திகைத்துப் போனேன். கடைசியில் பணத்தால்தானா இவளுடைய செலக்ஷன் மாறிப் போய்விட்டது!

''மங்களா... பணத்துக்காகவா அதை வேண்டாம்னு சொன்னே? ரசனைதான் முக்கியம்...''

''நன்னாத்தான் இருக்கு. நீங்க சொல்றது. ரசனைக்காக உயிரையே விட முடியுமா, என்ன? தவிர இதுவும் நன்னாத்தானே இருக்கு! முப்பத்தாறு ரூபாய்னா முப்பத்தாறு ரூபாய்...''

எனக்கு அப்போதுதான் என் புது மனைவி மேல் முதன் முறையாகக் கோபம் வந்தது.

''மங்களா... இனிமே பணம்தான் பெரிசுன்னு உயிரை விட வேண்டிய அவசியம் இல்லே. ஏதோ நான் பெரிய பணக்காரன் இல்லேன்னாலும், என் மனைவிக்காகச் செலவழிக்க என்னிடம் பணம் இருக்கு!''

நான் அதைச் சொல்லி, நாலு வருடங்கள் ஆனாலும், இன்னும் மங்களா அப்படியேதான் இருந்தாள். ரசனையை வாழ்வின் ஓர் அங்கமாக ஏற்றுக்கொள்ள அவள் மறுத்துக் கொண்டுதான் இருந்தாள்.

ஹரிணி பார்சலை வாங்கிக் கொண்டாள்.

''என்ன இது வத்ஸ்?''

''பிரித்துத்தான் பாரேன் ஹரிணி!''

குழப்பத்துடன் பிரித்துப் பார்த்தாள் ஹரிணி. படத்தைப் பார்த்ததும் அவள் முகம் அப்படியே மலர்ந்தது.

''ஹரிணி நாம் போன வாரம் கடையில் பார்த்தது. மை பிரஸெண்ட் டு யூ. ஹரிணி!''

''ஓ...தேங்க் யூ வத்ஸ்!'' என்றாள் ஹரிணி குரலில் உணர்ச்சி பொங்க.

''உங்கள் மனைவி என்ன சொன்னார்கள் வத்ஸ்?'' என்றாள் ஹரிணி திடீரென்று.

''வழக்கம் போலத்தான் ஹரிணி! அவளுக்கு ரசனையா பெரிது? இந்த ரூபாயில் உருப்படியான சாமான் ஏதாவது வாங்கலாமாம்!''

அவள் கொஞ்ச நேரம் பேசாமல் இருந்தாள்.

''ஐ அம் சாரி, வத்ஸ்!'' என்றாள் திடீர் என்று.

''தேங்க் யூ!''

''வத்ஸ், நான் உங்கள் மனைவியைச் சந்திக்கணுமே!''

''ஹரிணி, அனேகம் தடவைகள் நீ கேட்டுட்டே... பிரயோஜனம் இல்லே. அவளை எப்படியாவது மாத்த முடியும்னு நம்பினேன்! ஒவ்வொரு தடவையும் எனக்குத் தோல்விதான், ஹரிணி!''

''நான் முயன்று பார்க்கவா?''

''நோ, நான் விடமாட்டேன். ஏனென்றால் நீ அவளைப் பார்த்தால், நான் உன் நட்பை இழந்துவிடக்கூட வேண்டி இருக்கலாம். மங்களாவுக்கு உன்னைப் பத்தி ஒண்ணுமே தெரியாது. தெரிந்தால் என்ன செய்வாளோ என்ற பயம். ஹரிணி..... வேண்டாம். நம் நட்பு நீடிக்கணும்னா அவளை மீட்பண்ண வேண்டாம்.''

அவள் அமைதியில் ஆழ்ந்தாள். அவள் மேஜை மேல் வைத்த படத்தையே பார்த்தேன். திடீரென்று எனக்கு அந்த எண்ணம் தோன்றியது. ஹரிணியின் பக்கம் திரும்பினேன்.

''ஹரிணி! எனக்குத் திடீரென்று ஒரு பைத்தியக்காரத்தனமான சிந்தனை... வில் யூ மேரி மீ?''

அவள் திடுக்கிட்டவள் போல் என்னைப் பார்த்தாள்.

''கிவ் மீ ஒன் டே வத்ஸ்! நான் நாளை என் முடிவைச் சொல்றேன்!''

''ஓ... தேங்க் யூ!'' – நான் எழுந்து கொண்டேன்.

ஹரிணி, நீ என்னை மணக்க மாட்டேன்னு மறுத்துவிடாதே! மங்களாவுடன் நான் வாழும் வாழ்க்கை உப்புச் சப்பில்லாமல் போய்விட்டது. கொஞ்சம்கூட ஒத்துப் போகாத இரண்டு பேர் என்ன வாழ்க்கை வாழ்வது, ஹரிணி? என்னைப் புரிந்துகொள் ஹரிணி! கேவலம், உடலை அடிப்படையாக வைத்து உன்னை மணக்க முயலவில்லை நான். அதுதான் தேவையென்றால், மங்களாவே எனக்குப் போதும், ஹரிணி! இது உணர்ச்சிகள், உள்ளங்கள் சம்பந்தப்பட்ட விஷயம், ஹரிணி!

மறுநாள் ஹரிணியைச் சந்திக்க முடியாமல் போய்விட்டது. ஆபீஸில் இருந்தபடியே அவளுக்கு போன் செய்து, அன்று இரவு எட்டு மணி வரை அலுவலகத்திலேயே தங்கிவிட வேண்டிய அவசியம் நேர்ந்தது பற்றிச் சொன்னேன். அதற்கு மறுநாள் சந்திக்கலாம் என்றாள்.

அப்படியே சென்றேன், அவள் தங்கியிருந்த ஹாஸ்டலுக்கு.

''ஹலோ... ஹரிணி!''

''ஓ... கமான்!....'' – நான் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டேன். அவள் மேஜை மேல் சிறு பூனைக் குட்டி வடிவில் இருந்த பேப்பர் வெயிட்டை எடுத்துக்

திருமணம் தும்மல் போன்றது. அது எப்போது வருமெனச் சொல்ல இயலாது.

-ரஷ்ய பழமொழி

பிரியா பாலு



கையில் உருட்டினேன். சுவரில் மாட்டப்பட்டிருந்த ஓவியங்களைக் கவனித்தேன். புல் தரை ஓவியமும், இப்போது அவள் அறை சுவரில் 'ஜம்'மென்று வீற்றிருந்தது. அப்போதுதான் இத்தனை நேரம் ஹரிணி கம்மாவே இருந்தது உறைத்தது.

''ஹரிணி... உன் முடிவு என்ன?''

''ஹரிணி, ப்ளீஸ் சரின்னு சொல்லேன். நேரே போய் என் வக்கீல் நண்பன் ஒருவரைப் பார்க்கிறேன்.''

''வத்ஸ்... ஐ ஆம் சாரி... உங்கள் வார்த்தையை மீறி, நான் உங்கள் மனைவியைப் பார்த்தேன். நேத்து சாயங்காலம். நான் மங்களாவோட சுமார் ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தேன். அவளிடம் உங்களைப் பத்தி எல்லாம் சொன்னேன்..''

''வாட் டு யூ மீன்?''

''யெஸ்... விவாகரத்து உள்பட!''

நான் கொஞ்சம் நிதானித்தேன்.

''தட்ஸ் ஓ.கே. நான் சொல்ல வேண்டிய சிரமம் குறைந்துவிட்டது. ஆனால் எனக்கு வியப்பாக இருந்தது. விஷயம் தெரிந்து கொண்ட பிறகும், மங்களா எப்படி ஒரு ரியாக்ஷனும் காட்டாமல் போனாள்! அவள் காட்டவில்லையா, அல்லது...''

''ஆமாம், நீங்கள் அவளைப் புரிந்துகொண்டீர்களா, வத்ஸ்?'' என்றாள் ஹரிணி என்னைப் பார்த்து.

என் மனசுக்குள் அதே மாதிரி கேள்வி அதே சமயத்தில் எழுந்ததால், நான் கொஞ்சம் தடுமாறித்தான் போனேன்.

''வத்ஸ்! மங்களாவை உணர்ச்சியற்ற பொம்மை என்று எண்ணுகிறீர்கள்? அவளுக்கும் ஆசைகள் இருக்கின்றன. ஏகப்பட்ட கனவுகள் உள்ளன. மங்களா, நான் உன் கணவரை எடுத்துப் போக மாட்டேன். கோபமில்லையே என்றேன். அவள் என்ன சொன்னாள் தெரியுமா? 'ஹரிணி, கல்யாணங்கிற பந்தத்தைச் சுலபமாநீ அறுத்துடலாம்னு பார்க்கறயா? உன் மேல் கோபமும் கிடையாது; பயமும் கிடையாது. உன்கிட்ட நான் சவால்கூட விடறேன்.... ஏதோ எனக்கும் அவருக்கும் கொஞ்சம் முரண்பாடுகள் இருக்கலாம். அதுக்காக ரெண்டு பேரையும் பிரிக்கலாம்னு நினைக்கறயா?முடியாது!' என்றாள் உங்கள் மனைவி!''

ஹரிணி என் அருகில் வந்தாள்.

''வத்ஸ், நானும் நீங்களும் சேர்ந்து புல்லையும், பனியையும் ரசித்தே வாழ்க்கையை ஓட்டிவிட முடியும்னு நினைக்கிறீர்கள்? நான் யோசிக்கப் பார்த்தேன். நாம ரெண்டு பேரும் ரசிகர்களாவே இருக்கலாம், கணவன்-மனைவியாக இல்லை!''

நான் இப்போதும் பேசாமல் இருந்தேன்.

''வத்ஸ், கேவலம் எதெதையோ ரசித்த நம்மால், மனிதர்களையும், வாழ்வின் முரண்பாடுகளையும் ரசிக்க முடியாமலா போய் விடும்?''

நான் அவள் அறையை விட்டு வெளியே வந்தேன். முரண்பாடுகளையும் ரசிக்கக் கற்றுக்கொள்ள , முடியும் என்ற நம்பிக்கையைச் சுமந்துகொண்டு அங்கிருந்து நடக்க ஆரம்பித்தேன்.

அருள்வாக்கு

## பராசக்தியிடமிருந்து சக்தி பெறுவோம்!

ஒவ்வொரு நாளும் இரண்டு நிமிடங்களாவது ஈசுவரனை மனத்தில் நினைத்து அவருடைய அருளை நாம் பெற்றுக் கொள்ள வேண்டும். ''நான் நல்வழியாக நடந்து கொள்வதுடன், என்னை அண்டியவர்களும் உலகில் உள்ள மற்றவர்களும் நல்ல வழியில் நடக்க வேண்டும் என்ற உண்மையை நான் வேதம் மூலமாக அறிவிக்க வேண்டும். அந்தச் சக்தியை எனக்குக் கொடுக்க வேண்டும்'' என்று ஒவ்வொரு நாளும் பிரார்த்திப்போம். எலெக்ட்ரிசிடி சார்ஜ் பண்ணிக் கொள்வது மாதிரி இவ்வளவு எலெக்ட்ரிஸிடிக்கும் மூலமாக உள்ள பரமேசுவரனுடைய மகா சக்தியிடத்தில், பராசக்தியிடத்தில் நாம் மனத்தை அர்ப்பணம் செய்து அவளிடத்திலிருந்து நாம் சக்தியை வாங்கிக் கொள்ள வேண்டும். நம் நாட்டில் உள்ள மதங்களுக்குள்ளும் உலகத்தில் எல்லா மதங்களுக்குள்ளும் பகைமை வேண்டாம். அதுதான் வேதம் சொல்வது. ''எந்த வழியில் எவன் சென்றாலும் அது ஒரே இடத்தில்தான் வந்து சேருகிறது என்று வேதத்தில் மாத்திரம் சொல்லியிருக்கிறது. பாக்கி மதங்களிலெல்லாம் அநேகமாக நமக்குத் தெரிந்த வரையில் ''இந்த ஒரு வழியைத் தவிர வேறு வழியில் சென்றாயேயானால் அது நரகத்துக்குக் கொண்டு போய்விடும் என்று சொல்லியிருக்கிறதே ஒழிய, எல்லா வழிகளும் ஓர் இடத்துக்குத்தான் போகின்றன என்று சொல்லவில்லை. வேதத்தில்தான் எல்லாம் ஒரே இடத்தில் போய்ச் சேருகிறது'' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த உண்மையை அறிவிக்க வேண்டியது நமது பொறுப்பாக இருக்கிறது.

-ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்



# "வித்தியாசங்கள் என்ன?" போட்டி

## முதல் சரியான 15,000 விடைகளுக்கே விசேஷ தள்ளுபடி கூப்பன்கள்!

பாலிதீன் பாக்கெட்டிலுள்ள புதிய சன்சார் டிட்டர்ஜெண்ட் பவுடரின் விலை 1 Kg. ரூ.12.50 (வரிகள் தனி). ஆனால் விசேஷ சலுகையாக சன்சார் உங்களுக்கு ரூ. 9.50 (வரிகள் தனி) க்கு கிடைக்கிறது. இப்போட்டியில் கலந்து கொள்வதன் மூலம் விசேஷ அறிமுகச் சலுகையைப் பெறுங்கள். இந்த டிட்டர்ஜெண்ட் பவுடர் உங்கள் பணத்திற்கு சரியான மதிப்பைத் தரும் என்று நீங்களே கண்டுணர்வீர்கள்.



இங்கே கத்தரிக்கவும்

சன்சார் பாலிதீன் பாக்கெட்டில் எத்தனை கலர்கள் உள்ளன?

---------------

சுலபமான இலவசப் போட்டி







- மேலே உள்ள கேள்விக்கு குறிப்பிட்ட இடத்தில் விடை அளியுங்கள்.
- மேலே உள்ள இரண்டு பாக்கெட்டுகளுக்கும் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. 'A' உண்மையான பாக்கெட். வித்தியாசங்களை 'B' பாக்கெட்டில் சிறு வட்டத்தில் குறியிட்டு நுழைவுத்தாளை கத்தரித்து, அதனுடன் உங்களுடைய பெயர், விலாசத்தை தெளிவாக ஒரு வெள்ளைத்தாளில் எழுதி, கீழ்கண்ட விலாசத்திற்கு அனுப்பி வைக்கவும்.

  "வித்தியாசங்கள் என்ன" போட்டி,
  மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிட்,
  லக்ஷ்மி பவன், 609, மவுண்ட் ரோடு, சென்னை-600 006.
- இப்போட்டியில் தீர்ப்புக் குழுவினரின் தீர்ப்பே முடிவானது. இது சம்பந்தமாக வேறு எந்த கடிதப் போக்குவரத்தும் அனுமதிக்கப் படமாட்டாது.
- ஒரு குடும்பத்திற்கு ஒரு நுழைவுத்தாள் மட்டுமே.

முந்துங்கள் இன்றே கலந்து கொள்ளுங்கள்

K.I

MCA-SDP-101-TAM

# வெந்து தணிந்த காடுகள்



## இந்திரா பார்த்தசாரதி

**14**

**வி**ம்மி தாமோதரனுடைய கையைப் பிடித்துக் கொண்டிருந்தாள். 'இ ப்யூட்டி அண்ட் இ பீஸ்ட்' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டான் அருண். அவ்வாறு சொல்வது தவறு என்ற எதிர்ப் புணர்வும் உடனே தோன்றியதுதான் அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

அவனைப் பார்த்துவிட்டுச் சிறிது தயங்கி நின்றாள் விம்மி.

அவள் அவனை விட்டுப் பிரிந்த பிறகு இப்பொழுதுதான் முதல் தடவையாகப் பார்த்துக் கொள்கின்றனர்.

தாமோதரன் புன்னகையுடன், ''ஹலோ மிஸ்டர் அருண்!'' என்று சொல்லியவாறு கையை நீட்டினான்.

''ஐ ஆம் ஸாரி... ராதிகா... நான் போறேன்... எனக்கு நேரமாயிடுத்து. நீயும் சாப்பிடறதுக்காக இங்கே வரவேண்டாம். ஓ. கே?'' என்று ஃபோனில் சொல்லிவிட்டுத் தாமோதரனிடம் கையை நீட்டிக் கொண்டே விம்மியைப் பார்த்துப் புன்னகை செய்தான் அருண்.

''ஹௌ ஆர் யூ?'' என்று கேட்டாள் விம்மி. அவள் புன்னகை செய்ய மிகவும் சிரமப்படுகிறாள் என்று தோன்றிற்று அருணுக்கு.

''பைன்... பட் நாட் ஸோ ஃபைன், ஆஸ் யூ ஆர் டூயிங்... இப்போ நீ பெரிய ஆர்ட்டிஸ்ட்... உன்னைப் பத்தி பேப்பர்ல நிறையப் படிக்கிறேன்....''

விம்மி பேசாமல் இருந்தாள்.

''நீங்க சாப்பிட்டாச்சா?'' என்று கேட்டான் தாமோதரன்.

''இல்லே...''

''தென்... வொய் டோன்ட் யு ஜாய்ன் அஸ்?'' என்றான் தாமோதரன்.

விம்மி சிறிது திடுக்கிட்டவள் போல் தாமோதரனைப் பார்த்தாள்.

''தட் ஈஸ் ஆல் ரைட்... நீங்க சாப்பிடுங்க. எனக்கு டைம் ஆச்சு. நான் போறேன்.''

தான் திடுக்கிட்டுப் பார்த்ததை அருண் கவனித்துவிட்டான் என்றுணர்ந்த விம்மி, ''கம் ஆன் அருண், ரொம்ப நாள் கழிச்சுப் பாக்கறோம்.... ஒண்ணா சாப்பிடலாம். வாங்க....'' என்றாள்.

அருண் மணியைப் பார்த்துக்கொண்டே ''ஓ.கே....'' என்று சொல்லிக்கொண்டே உட்காருவதற்குச் சுற்று முற்றும் இடத்தைத் தேடினான். வலக் கோடியில் இடம் காலியாக இருந்தது. அவ்விடத்தை நோக்கி நடந்தான்.

அருண் தான் உட்கார்ந்த பிறகுதான் கவனித்தான், தாமோதரன் சோபாவில் சப்பணம் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருப்பதை! வேடிக்கையாக இருந்தது அருணுக்கு. தாமோதரன் பக்கத்தில் விம்மி.

விரேந்தர் கையில் 'மெனு கார்டை' எடுத்துக்கொண்டு அவர்களை நோக்கி வந்தான்.

''எனக்கு எது பிடிக்கும்னு உனக்குத் தெரியுமே, விம்மி, சொல்லு'' என்றான் அருண்.

''மறந்துபோச்சு....நீங்களே சொல்லுங்க'' என்று மெனு கார்டைப் பார்த்துக்கொண்டே சொன்னாள் விம்மி.

அந்த இடத்தை விட்டு உடனே எழுந்து போக வேண்டும் போல் தோன்றிற்று அருணுக்கு. அப்படி எழுந்து போனால், அது சிறுபிள்ளைத்தனமாக இருக்கும்.

அவன் மெனு கார்டை வாங்கிச் சிறிது நேரம் அதைப் பார்த்துவிட்டுப் பிறகு சொன்னான்: ''இன் ஃபாக்ட் எனக்குப் பசி இல்லே. சான்ட்விச், காஃபி போதும்.''

விம்மி கண நேரம் அவனை உற்றுப் பார்த்தாள். பிறகு தாமோதரனைக் கேட்டாள். ''உங்களுக்கு?''

''சைனீஸ் சூப்... கபாப்... காஃபி'' என்றான் தாமோதரன்.

''வெஜிடபில் சூப்... மஷ்ரூம் சான்ட்விச்சஸ்... காஃபி'' என்றாள் விம்மி.

விரேந்தர் எழுதிக் கொண்டு சென்றான்.

சிறிது நேரம் அங்கு அமைதி நிலவியது. விம்மி அங்கு சுவரில் நீட்டப்பட்டிருந்த மொனைக் ஓவிய மொன்றைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''எனக்கு அது ஒண்ணும் புரியலே'' என்றான் அருண்.

''புரியறதுக்கு ஒண்ணுமில்லே. இட் ஈஸ் ஜஸ்ட் ஃபோனி'' என்றான் தாமோதரன்.

''அப்படியா?'' என்று ஆச்சரியத்துடன் வினவினான் அருண்.

''எஸ்... ஹுசேனைப்' பார்த்து எல்லோரும் ஆரம்பிச்சுட்டாங்க...பட் ஹுசைன் ஈஸ் எ ஜீனியஸ்.. நான் 'செண்டர்' டைரக்டர் கிட்டே சொன்னேன். இதை எடுத்துடுங்கோ வேணும்னு. ஆனா இந்தக் காலத்திலே 'ஃபோனி'க்குத்தான் மதிப்பு'' என்றான் தாமோதரன்.

''உங்க பேட்டியை நான் நாலைஞ்சு மாசத்துக்கு முன்னாலே படிச்சேன். விம்மியைப் பத்திச் சொல்லியிருக்கிறதையும் படிச்சேன். எனக்கொரு சந்தேகம், விம்மி, உன்னைக் கேக்கலாமா, இஃப் யூ டோன்ட் மைன்ட்?''

''என்ன?''

''என்னோடு நீ இருந்தபொழுது அந்த வாழ்க்கை அறுத்துப் போனதற்கு என்ன காரணம்? அதனாலே நீ ஆர்ட்டிஸ்டா ஆய்ட்டேங்கறது சந்தோஷப்பட வேண்டிய

விஷயந்தான். ஆனா எந்த அளவுக்கு உன் வாழ்க்கை அலுத்துப் போக நான் காரணமாக இருந்தேங்கிறதுதான் எனக்குப் புரியலே....''

விம்மி பேசாமல் இருந்தாள்.

''நீ இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லணும்னு நான் வற்புறுத்தலே. ஆனா மிஸ்டர் தாமோதரன், உங்களை ஒரு சந்தேகம் கேட்கலாம்னு இருக்கேன். எனக்கு இப்பொழுதைய வாழ்க்கை அலுத்துப் போயிண்டிருக்கிற மாதிரி இருக்கு. நான் ஒரு ஆர்ட்டிஸ்டா ஆக முடியுமா?''

தாமோதரன் சிரித்தான்.

''நான் வேடிக்கைக்காகக் கேட்கலே, மிஸ்டர் தாமோதரன்... ஐ ஆம் ஹானஸ்ட்.''

''வெறும் அலுப்பு மட்டும் இருந்தாப் போராது, மிஸ்டர் அருண், ஆற்றலும் வேணும்'' என்றான் தாமோதரன்.

விம்மி புன்னகையுடன் வேறு எங்கோ பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் பார்வை சென்ற திசையை நோக்கினான் அருண்.

''ஒண்ணுமில்லே அங்கே... நீங்க சொன்னதுதான் சிரிப்பு வந்தது'' என்றாள் விம்மி.

''எனக்கு வாழ்க்கை அலுத்துப் போச்சுங்கறது உனக்கு ஹாஸ்யமா இருக்கா?''

''எஸ்...இப்போ நீங்க கம்பெனியிலே நம்பர் ஒன்னு இருக்கீங்கன்னு கேள்விப் பட்டேன். இது உங்களுக்குச்சந்தோஷத்தைத் தரவேண்டிய விஷயம்தானே?''

அருண் சிறிது நேரம் பேசாமல் இருந்தான். பையிலிருந்து சிகரெட் பாக்கெட்டை எடுத்துப் பற்றவைக்கப் போனவன், திடீரென்று நினைவு வந்தவன் போல், 'ஐ ஆம் ஸாரி' என்று சொல்லிக் கொண்டே, பாக்கெட்டைத் தாமோதரனிடம் நீட்டினான்.

தாமோதரன் ஒரு சிகரெட்டை எடுத்துக் கொண்டான். அவன் சிகரெட்டைப் பற்ற வைத்தான் அருண்.

''ஓ. கே. கம்பெனியிலே நம்பர் ஒன் தான். பட் வாழ்க்கைங்கிறது அவ்வளவு தானா?''

''நீங்கதான் சொல்லணும்.''

''ஒரு 'ப்ளேண்ட் அல்லே' நிற்கிற மாதிரி இருக்கு. ஒரு தேக்கம்... இதெல்லாம் எதுக்குன்னு சில சமயம் தோணறது...''

தாமோதரன் மௌனமாகச் சிகரெட் புகையை உள்ளுக்குள் இழுத்துக் கொஞ்சம் கொஞ்சமாக வெளியே விட்டுக் கொண்டிருந்தான்.

சோபாவில் சாய்ந்து உட்கார்ந்திருந்தவள் நிமிர்ந்து உட்கார்ந்தவாறே கேட்டாள்: ''நான் உங்களை ஒண்ணு கேட்கலாமா?''

''ப்ளீஸ்!''

''ராதிகா உங்களோடத்தானே இருக்கா?''

''எஸ்...''

சிறிது நேரம் அங்கு அமைதி நிலவியது. அருண் சிகரெட் சாம்பலை 'ஆஷ்-ட்ரே'யில் தட்டினான்.

''எதுக்காக இந்தக் கேள்வி கேட்டே?''

''அவ கூட இருக்கிற போது எப்படி உங்களுக்கு இந்த மாதிரி விரக்தி ஏற்பட்டது, அதுதான் எனக்குப் புரியலே...''

அருண் ஆங்கிலத்தில் பேச ஆரம்பித்தான். ''மனித சுபாவத்தை, 'இது இப்படித்தான்' என்று வரையறுத்துச் சட்டம் போட்டு, 'ப்ரேம்' பண்ணி மாட்டிட முடியாது. ராதிகாவைப் பற்றி அவளை அப்பொழுது நீ அறிந்த வரையில் என்ன அபிப்பிராயம் கொண்டிருந்தாயோ அதற்குப் பொருத்தமாக அவள் எப்போதும் இருந்து கொண்டிருக்க வேண்டுமென்ற அவசியமில்லை.''

விம்மி வாசலை நோக்கிப் புன்னகை செய்தாள்.

அருண் திரும்பிப் பார்த்தான்.

ராதிகா....

அவர்களைப் பார்த்ததும் அவள் ஒரு கணம் திகைத்து நின்றாள். பிறகு சமாளித்துக் கொண்டு, விம்மியைப் பார்த்துப் புன்னகை செய்தாள்.

ராதிகா அவர்களை நோக்கி வந்தாள்.



விம்மி எழுந்து அவளருகில் சென்று அவளைக் கட்டிக் கொண்டாள். அவளுடைய இந்த உற்சாகம் ராதிகாவைச் சிறிது ஆச்ச ரியத்தில் ஆழ்த்தியது போலத் தோன்றியது.

''ஒரு 'ஸ்டார் பெயிண்டரை' இன்னிக்குப் பார்க்கப் போறேன்னு நான் நினைக்கவே யில்லே'' என்றாள் ராதிகா சிரித்துக் கொண்டே.

''ரெண்டு... இவர்தான் மிஸ்டர் தாமோ தரன்'' என்றான் அருண்.

தாமோதரன் எழுந்து கைகளைக் கூப்பி னான்.

''ஐ ஆம் ராதிகா'' என்று சொல்லிக் கொண்டே ராதிகாவும் கைகளைக் கூப்பினாள்.

விம்மியின் அருகில் உட்கார்ந்தாள்ராதிகா.

''நான் கிளம்பிண்டுதான் இருந்தேன். விம்மியையும் தாமோதரனையும் பார்த்தேன். கொஞ்சம் இருந்துட்டுப் போகலாம்னு தோணித்து....'' என்று சொன்ன அருணை இடைமறித்தாள் ராதிகா.: ''ஒரு சமாதான மும் வேணும். நீங்க விம்மியைப் பார்த்துப் பேசணும்னு நான் வேண்டாம்னு சொல்லப் போறேன்? என்னை வரவேண்டாம்னு எதுக் காகச் சொன்னீங்க? நீங்க அப்படிச் சொல்றபோதே எனக்கு எதுக்காக இப்படிச் சொல்றீங்கன்னு தோணித்து.... மை டியர் அருண், ஐ நெவர் தாட்...''என்று சொல்ல வந்ததைச் சொல்லி முடிக்காமல் தன் கைப் பையைத் திறந்து சிகரெட் பாக்கெட்டை எடுத்தாள்.

''யு நெவர் தாட் வாட்?'' என்றான் அருண்.

''தட் யு ஆர் எ கவர்ட்'' என்று சொல் லிக்கொண்டே சிகரெட்டைப் பற்றவைத் தாள் ராதிகா.

அன்றிரவு விம்மிக்கு உறக்கம் வரவில்லை. புரண்டு புரண்டு படுத்ததுதான் மிச்சம். ஓயா மல் பல சிந்தனைகள்.

....அருண் மத்தியானம் சொன்னவை விம் மியின் காதில் ஒலித்துக் கொண்டிருந்தன. ஒரு 'பிளேண்ட் அல்லே'லே நிக்கற மாதிரி இருக்கு... ஒரு தேக்கம். இதெல்லாம் எதுக்குன்னு சில சமயம் தோணறது!... 'மனித சுபாவத்தை இது இப்படித்தான் என்று வரையறுத்துச் சட்டம் போட்டு, 'ப்ரேம்' பண்ணி மாட்டிவிட முடியாது....'

எவ்வளவு வாஸ்தவம்! அருண் இவ்வாறு சொல்லக் கூடுமென்று அவள் எதிர்பார்க்க வில்லை. அவன் சுபாவத்தையும் வரையறுத் துச் சட்டம் போட்டு 'ப்ரேம்' பண்ணி மாட்டி விட்ட காரணத்தினால் தான் அவன் இவ் வாறு சொல்லக்கூடுமென்று அவள் எதிர் பார்க்கவில்லை.

வாஸ்தவமான வார்த்தைகள் என்றுஅவள் உணர்வதற்குக் காரணம், அவளே இதெல் லாம் எதற்கு' என்று தெரியாத நிலையில் விதியின் எல்லையில் நிற்கிறாள். அவள் ஒரு சமயம் அருணைப் பற்றி நினைத்ததுண்டு... 'மலையின் உச்சியை அடைந்தாலும் மலையின் உச்சியை அடைந்துவிட்ட பிரக்ஞை இல்லா மல், வெற்றி அடைய வேண்டு மென்ற வெறியே வாழ்க்கையின் குறிக்கோளாகி விடும்....' அது தப்பாகிப்போய்விட்டது.... மலையின் உச்சியை அடைந்து விட்டால் தனிமைதான் மிஞ்சும்.

அவளுக்கு அருணுடனிருந்த வாழ்க்கை அலுக்கக் காரணம், அவளுக்கென்று ஒரு தனி முகம் இருக்கின்றதென்று காட்ட வேண்டுமென்ற வெறி... 'இல்லத்தரசி'என்ற பட்டத்தைச் சுமந்து கொண்டு வாழ்க்கை முழுவதும் வீட்டில் அடைபட்டு இருக்கக் கூடாதென்கிற ஆவேசம். குறிக்கோள் நிறைவேறிவிட்டது. இன்று அவளைப் பற்றி எல்லாப் பத்திரிகைகளும் விமரிசிக்கின்றன. 'குறுகிய காலத்தில் பிரபலமடைந்துவிட்ட மிகச் சிறந்த ஓவியர்' 'கணவனுக்கு அடங்கிய மனைவியாக வாழ விரும்பாமல், அக்கட்டுப் பெட்டித்தனத்தை உடைத்துக் கொண்டு புறப்பட்ட பிறவி மேதை....' 'தாமோ தரன் நிறுவ முயல்கின்ற நவீன சமுதாயத் தின் புதுமைப் பெண்....'....

அவளும் அவள் விரும்பிய அளவில் மலையின் உச்சியை அடைந்து விட்டாள். இப்பொழுது தனிமைதான் மிஞ்சுகிறது.

இத்தனிமைதான் வாழ்க்கையின் குறிக் கோளா? அவளுடைய இப்பொழுதைய வாழ்க்கை இப்பொழுது அவளுக்குத் திருப்தி யைத் தருகின்றதா?

தாமோதரன் நிறுவ முயலும் நவீன சமுதாயம்! மனத் தடை ஏதுமில்லாமல், உணர்ச்சிகளுக்குத் தளையிடாது செய்ய விரும்புவதைச் செய்து முடிக்கும் கலைக் குடும்பம்... இலக்கியம்.... ஓவியம், நாட கம் ஆகியவற்றுக்காகத் தங்களை அர்ப் பணித்துக் கொண்ட இளைஞர்கள்....

தாமோதரனை ஒரு பத்திரிகை ஆசிரியர் 'சாக்ரடீஸ்' என்று வர்ணித்திருந்தார். தாமோதரன் ஒரு தீவிர சிந்தனையாளன் தான். சந்தேகமில்லை. அவன் உடற்குறையை மீறி அவனுடைய நம்பிக்கையின் குரல் கம்பீரமாக ஒலிக்கும்போது, அவனால் கவரப் படாதவர்கள் யாரும் இருக்க முடியாது. அந்தந்தக் காலத்திய சமூக மதிப்புகளுடைய வரையறையைத் தாண்டிப் புதியதொரு சமு தாயத்தைப் படைக்க வேண்டு மென்ற இச்சிந்தனையாளர்களின் முயற்சி நடப்பியல் உண்மையிலிருந்து தப்பித்துக் கொள்ள விரும்புகிறவர்களுக்குப் பெரு விருந்தாய் இருப்பதில் ஆச்சரியமில்லை. ஆனால் பலவித கற்பனைப் பரிமாணங்களுடைய ஒருவருக்கு இத்தகைய சிந்தனையின் ஒரு வழிப் பாதை அலுப்பைத் தருகின்றது என்கிறபோதுதான் வாழ்க்கையில் எதைத்தான் ஆதாரமாகக் கொண்டு வாழ முடியும் என்ற கேள்வி எழு கிறது,.... பழமை, புதுமை என்பவை யெல்லாம் காலக் கண்ணாடியில் தெரியும் வெறும் தோற்ற மயக்கங்கள். வாழ்க்கைக்கு அர்த்தமே கிடையாது.... அர்த்தம் இருப்



நிருபர்: நீங்கள் தேர்தலில் தோற்றுப் போனதற்கு முக்கிய காரணம்?''

அரசியல்வாதி: வாக்காளர் களெல்லாம் அடிக்கடி கட்சி மாறிடறாங்க. அதுதான்.

- கோவி. பாலுமோகி

1. ஸ்விட்சர்லாந்து நாட்டில் ஆண்களுக்கு மட்டுமே வாக்குரிமை அளிக்கப்பட்டுள்ளது.

2. ஸ்விட்சர்லாந்து கடந்த பல ஆண்டுகளாகச் சமாதானத்தில் நம்பிக்கை கொண்டு நடுநிலை வகிப்பதால், இந்நாட்டின் படைகளுக்குத் தளபதிகள் நியமிக்கப்படுவது கிடையாது.

3. இரண்டாம் உலகப்போர் நடைபெற்ற போது ஜெர்மனியின் சர்வாதிகாரியாக விளங்கிய இட்லரிடம், அவரது நண்பர்கள் ஸ்விஸ் நாட்டையும் கைப்பற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். அதற்கு இட்லர், "வேண்டாம் ஸ்விட்சர்லாந்து ஒரு அழகான நாடு. நாம் ஆசைப்பட்டு இப்போது அதை அழித்து விட்டால் பிறகு எதிரிகளிடம் ஒன்றாக அமர்ந்து பேச நடுநிலை நாடு என்பது இல்லாமல் போய்விடும். மேலும் உங்களைப் போன்றவர்கள் ஓய்வு கொள்ள விரும்பினால் போரில்லாத நாடு என்று ஒன்று வேண்டாமா? ஆகவே ஸ்விட்சர்லாந்தைத் தொடக் கூடாது" என்று கூறிவிட்டார்.

-பி. நாராயணன்



பதாக மேற்கொள்ளும் பாவனை, நம்பிக்கை வாழ்க்கைக்கு அளிக்கும் சலுகை.

தாமோதரனுடன் அவள் இருக்கத் தொடங்கிய புதிதில் வாழ்க்கை சுவாரஸ்யமாகத்தான் இருந்தது. அவன் குழுவினர் அவளை ஏற்றுக் கொண்டபோது அவளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி! தொடர்ந்து கலை, இலக்கியம் சம்பந்தமான விவாதங்கள், அதுவரையில் அவள் வாழ்க்கையில் இழந்த தருணங்களுக்கு ஈடு செய்வன போலிருந்தன. வெறி பிடித்தது போல் அவள் ஒரு நாளைக்குப் பதினெட்டு மணி நேரம் ஓவியம் வரைவதிலேயே செலவழித்தாள். அவளுடைய முதல் கண்காட்சியின்போது, விமர்சகர்கள் அவளைப் பற்றி எழுதிய விரிவுரைகள், பாராட்டுக்கள், விருந்துகள்... இரண்டு வருஷத்துக்குள் பம்பாயைச் சேர்ந்த ஒருவர் அவளைப் பற்றி ஒரு டாக்குமெண்டரி படமே தயாரித்து விட்டார்.

காலத்தின் நெடுந் தூரத்திலிருந்து பார்க்கும்போதுதான் வரலாற்றுப் பெரியார்கள், மனிதத் தன்மையோடு சம்பந்தப்படாமல், புகைப் படங்களாய், நிழல் சித்திரங்களாய், தெய்வச் சிலைகளாய்க் காட்சி தருகிறார்கள். அவர் காலத்தில் அவர்களுடன் நெருங்கிப் பழகியவர்களுக்குத்தான் இப்பெரியார்களின் மனத்தின் பலங்களும் பலவீனங்களும் புரிந்திருக்கும். புகழ்ந்து பேசப்படுகின்ற எந்த மனிதனையும் அருகிலிருந்து பார்த்தால்தான் அவனுக்குள் எத்தனை உருவ முரண்பாடுகள் இருக்கின்றன என்று தெரிகிறது.

தாமோதரனைப் பற்றி அவளறிந்த அளவுக்கு மற்றவர்களுக்கு அவனைப் பற்றித் தெரியுமா? அவனைச் சேர்ந்த இக் கலைக் குடும்ப அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். அவர்கள் கூட்டமாகக் காட்டும் முகம் ஒன்றுபோல் தோன்றினாலும், தனித் தனியாய் அவர்களுக்குள் எத்தனை மனப் பரிமாணங்கள், முக வேறுபாடுகள் இருக்கின்றன என்று மற்றவர்களுக்குத் தெரியுமா?

அவளுடைய முதல் கண்காட்சி நன்றாக நடந்தேறியதை ஒட்டி நிகழ்ந்த விருந்துக்குப் பிறகு, எல்லாரும் போன பின், தாமோதரன் அவளருகில் வந்து படுத்தான். அவளுக்கு அவனுடைய இந்தச் செய்கை சிறிது அதிர்ச்சியைத் தந்தது. அவள் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்தாள். தாமோதரன் அவளைக் கட்டிக் கொண்டான். அவள் அவன் கைகளை விலக்கி விட்டாள்.

"உனக்கு இது பிடிக்கவில்லையா?" என்று கேட்டான் தாமோதரன்.

அவள் பேசாமலிருந்தாள்.

"பசி தாகம் மாதிரிதான் செக்ஸ். இயற்கையின் தேவை... இதுக்கு ஒரு புனிதத் தன்மை கொடுத்து, அசட்டு உணர்ச்சிகளுக்குப் பலியாகக் கூடாது..."

"எனக்கு அது இப்போ தேவைப்படலே... இன்னொண்ணு....."

"சொல்லு...."

"நம்ம ரெண்டு பேருக்குமிடையே இருக்கிற உறவைக் கொச்சைப்படுத்த நான் விரும்பலே...."

"இது எப்படிக் கொச்சைப்படுத்தறதா அர்த்தம்? ரெண்டு பேர் ஒருத்தரையொருத்தர் விரும்பினா, அதை வெளிப்படுத்தறதுக்கு இதைத் தவிர வேறு என்ன பாஷை இருக்கு? இன்னொரு விஷயம்... இங்கே எல்லாரும் உணர்ச்சிகளுக்குப் பூட்டு போட்டு வைக்கக் கூடாதுங்கிறதுதான் சட்டம்... 'இன்ஹிபிஷன்' இருக்கக் கூடாது..."

"நான் இப்போ உங்களை மறுத்தா நீங்க என்ன நினைப்பீங்களோன்னு ஒரு 'இன்ஹிபிஷன்'லே நீங்க செய்ய விரும்பறதுக்கு நான் உடன்பட்டா அது சரியா?"

தாமோதரன் சிறிது நேரம் பேசாமலிருந்தான். பிறகு எழுந்து சென்று வேறிடத்தில் படுத்துக் கொண்டான்.

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு அவன் மனநிலையில் ஏற்பட்ட மாறுதலை அவள் கவனிக்கத் தவறவில்லை. கூட்டத்தில் அவன் காட்டும் முகம் வேறு, தனிமையில் அவன் காட்டும் முகம் வேறு.

அவன் அவளை அந்த இடத்தை விட்டுப் போகச் சொல்லி யிருக்கலாம். சொல்லவில்லை. அவள் அவனுடன் இருக்கிறாள் என்பதினால் பலர் பலவிதமாகக் கற்பனை செய்துகொள்ளட்டும். அந்தக் கற்பனையே அவனுக்குப் போதுமானது என்று நினைக்கிறானோ என்றுகூட அவளுக்குத் தோன்றியது.

அவன் மற்றவர்களுடன் சிரித்துப் பேசுவதை அவள் கடந்த சில நாட்களாக விரும்பவில்லை என்பதை உணரத் தொடங்கியபோதுதான், மனித சுபாவம் ஓர் எல்லைக்குள் அடங்காது என்று அவளுக்குப் புரிய ஆரம்பித்தது. தாமோதரன் அவளிடம் இதைப் பற்றி வெளிப்படையாகச் சொல்லவில்லை. ஆனால் அவனது சில செய்கைகளினின்றும் அவளுக்கு இது புலனாகியது. (தொடரும்)

# தேவை: பரிதாபம் அல்ல; மனிதாபிமானம் தான்!

[இந்தச் சிறப்பிதழின் ஆசிரியர் குழுவைச் சேர்ந்த திரு ராமகிருஷ்ணன், திரு சந்திர சேகரன், திரு வரதக்குட்டி, குமாரி ஷெரின் பீடர்ஸ் ஆகியோர் சந்தித்து உரையாடுகிறார்கள்.]

ராம: இந்தியாவில் பொதுமக்களுக்கு ஊனமுற்றோரிடத்தில் நாளுக்கு நாள் பரிவு குறைகிறது என்பது என் கருத்து. யந்திர மயமான அமெரிக்காவில்கூட, கண் தெரியாதவர், சாலையைக் கடக்க நின்று கொண்டிருந்தால், சாலையில் செல்லும் நூறு கார்களும், அவருக்காக நின்று அவர் சாலையைக் கடந்த பிறகுதான் செல்லும். நம் நாட்டைப் பார்த்தால் வருத்தமாக இருக்கிறது.

வரத: நோ! நீங்கள் சொல்வது தவறு. கல்வியின் தரம் உயர்ந்து வரும் இந்நாளில் மக்களின் போக்கிலும் முன்னேற்றம் இருப்பதை நான் உணர்கிறேன். ஊனமுற்றோருக்கு உதவும் எண்ணம் எங்கும் பரவலாக உள்ளது.

ஷரின்: நான் மறுக்கிறேன். பெரும்பாலும் சுயநலமே மிகுந்திருக்கக் காண்கிறோம். நாம் கேட்டால் தவிர தாமாக யாரும் உதவி செய்வதில்லை.

சந்திர: 'நான் ஒப்புக்கொள்ள முடியாது. பம்பாயில் பார்வையற்றவர்கள் தனியாக அடையாளம் உள்ள கைத்தடியை எடுத்துச் சென்றால் எல்லோரும் அவர்களுக்கு உதவுகிறார்கள். சாலையைக் கடக்க வேண்டும் என்றால் அவர்கள் கையைப் பிடித்து அழைத்துச் செல்கிறார்கள்.

✖ திரு வரதகுட்டி ✖ திரு ராமகிருஷ்ணன் ✖ திரு சந்திரசேகரன்
✖ குமாரி ஷரீன் பீட்டர்ஸ்



வரத: பத்து அல்லது பதினைந்து வருடங்களுக்கு முன் உடல் ஊனமுற்றோர் ஏதாவது பொது அல்லது மங்கல நிகழ்ச்சிகளுக்கு வந்தால் அதை அபசகுனமாக எல்லோரும் எண்ணினார்கள். இப்போது அந்நிலை மாறிவிட்டது. இவர்கள் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் போக முடிகிறது. அந்த அளவுக்கு மக்கள் மாறியுள்ளார்கள்.



ஷரின்: நம்மைச் சகித்துக் கொள்ளப் பழகியிருக்கிறார்கள் என்று வேண்டுமானால் சொல்லலாம். அவ்வளவுதான். மேல் நாடுகளில் கிறிஸ்துமஸ் போன்ற பண்டிகை தினங்களில் ஊனமுற்றோர் வீடு தேடிப் பலர் வந்து, வாழ்த்துவது வழக்கமாக இருந்து வருகிறது. அங்கே கடைகளுக்குத் தனியே சென்று ஊனமுற்றோர் தங்களுக்கு வேண்டியதை வாங்கிக் கொள்ள வசதிகள் உள்ளன....

வரத: அதென்னவோ வாஸ்தவம்தான். சினிமா அரங்குகள், பொது இடங்களுக்குச் சென்றால் படிக்கட்டுகள் நமக்கு முட்டுக்கட்டையாக இருக்கின்றன. இம்மாதிரியான இடங்களுக்கு நாமும் சகஜமாகப் போக ஒரு சரிவான அமைப்பு இருந்தால் நல்லது.

ராம: வெளிநாடுகளில் சரிவான அமைப்பு (ramp) இன்றி கட்டிடங்கள் கட்டுவதை அரசு அனுமதிப்பதில்லை. நம் நாட்டிலும் அதுபோலச் சட்டங்கள் வரவேண்டும்.

ஷரின்: அதை விடுங்கள். பஸ்ஸை எடுத்துக்கொள்ளுங்களேன். அதில் முண்டியடித்துக் கொண்டு நம்மால் எப்படி ஏற முடிகிறது? ரயிலிலும் கூடத்தான் உதவிக்கு யாராவது வேண்டியிருக்கிறது.

ராம: சமீபத்தில் நான் ரயிலில் சென்றபோது எனக்கு மேல் பர்த் ஒதுக்கியிருந்தார்கள். நான் கேட்பதற்கு முன்பாகவே ஒரு பிரயாணி, தமக்கு ரத்த அழுத்தம் என்றும் கீழ் பர்த் தான் தமக்கு வேண்டு

மென்றும் அழுத்தம் திருத்தமாய்ச் சொல்லிவிட்டார்.

சந்திர: நிஜமாகவே அவருக்கு ரத்த அழுத்தம் இருந்திருக்கலாமில்லையா?

ராம: இருக்கலாம்; இல்லாமலுமிருக்கலாம். நம்மைப் போன்றவருக்கு உதவுவது இருக்கட்டும். பொதுவாகவே ஒருவருக்கொருவர் உதவியாக இருக்க வேண்டும் என்ற மனப்பான்மை நம் மக்களிடம் குறைவாகத்தான் இருக்கிறது.

வரத: தனியாக நமக்காக ஒரு தனி' கம்பார்ட்மெண்ட் இருந்தால் எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்துவிடும்!

சந்திர: எனக்கு இது சம்மதமில்லை. நம்மை ஏதோ பிரித்து ஒதுக்குவது போல் அப்போது தோன்றும். இயல்பாக மற்றவர்களைப் போலவே நம்மை நடத்த வேண்டும். மனிதாபிமானம் மக்களிடம் வளர்ந்தால் போதும். நமக்குப் பிரச்னைகள் வெகுவாகக் குறைந்து போகும்.

ராம: பிரச்னைகள் நகரத்தை விடக் கிராமத்தில்தான் அதிகம். நமக்காவது வராந்தாவில் சாலையைப் பார்க்க நின்றாலும் பொழுது போய்விடும். ஆனால் கிராமங்களில் பல்லாயிரக் கணக்கானோர் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்குத்தான் ஏதாவது செய்யவேண்டும்.

வரத: அரசாங்கம் தானாக முன்வந்து நம் குறைகளைக் கவனிக்கா விட்டால்நாம்தான் சங்கம் அமைத்து நமது உரிமைகளுக்காகப் போராட வேண்டும். தலைநகரிலேயே பார்வை யற்றவர்கள் சமீபத்தில் போராடினார்களே?

சந்திர: போராடலாம்தான். ஆனால் அவசரப்படக் கூடாது. முதலில் நமக்கு நாமே உதவிக் கொள்ளவும் நம் பிரச்னைகளைப் பிறர் அறியச் செய்யவும் சங்கம் முயலலாமே?

வரத: மூன்று சதவீதம் ரிசர்வேஷன் என்பதெல்லாம் கண் துடைப்புத்தான். நாம் தான் நம் சங்கம் மூலம் சரிபார்த்து நம் உரிமைகளை நிலைநாட்ட வேண்டும்.

ஷரீன்: என்னையே எடுத்துக் கொள்ளுங்களேன். எம். ஏ. முதல் வகுப்பில் பாஸ் செய்தும், எனக்குத் தகுந்த வேலை இது வரை கிடைக்கவில்லை.

வரத: எனக்கும் ஓர் அனுபவம் உண்டு. பி. காம் முதல் வகுப்பில் தேறியிருந்தும் வேலை கிடைக்காததால், சொந்தமாகவே தொழில் செய்ய ஆரம்பித்து விட்டேன்.

ராம: சங்கம் அமைப்பது பற்றி ஊனமுற்றோர்களோ, அவர்களின் பெற்றோர்களோ கல்வி அலுவலகத்துக்குக் கடிதம் எழுதித் தங்கள் கருத்தைத் தெரிவித்தால், நாம் அக்கடிதங்களை ஆராய்ந்து முடிவெடுக்கலாம். இது ஒரு நல்ல தொடக்கமாக இருக்கும்.

வரத: இன்னொன்று. நம் சினிமா, நாடகங்களில் ஊனமுற்றோர்களை ரொம்பவும் தாக்கும் வசனங்கள் இடம் பெற்று வேதனை அளிக்கின்றன.

ராம: சமீபத்தில் வந்த சினிமா ஒன்றில் பெண்ணின் தகப்பனார், "என் பெண் என்ன முடமா, கூனா, குருடா?" என்று கேட்பது போல வசனம் வருகிறது.

ஷரீன்: அரசாங்க மருத்துவ மனைகளில் ஊனமுற்றோருக்கு உதவப் போதிய வசதிகள் இல்லையே?

வரத: ஆமாம்; பொது மருத்துவ மனையில் தரப்படும் காலிபர் பூட்ஸ்கள் கூட நமக்கு ஒத்துக்கொள்வதில்லை. அதனால் நமக்கு ஒருவிதப் பயனுமில்லை.

ராம: நோ! நோ! ஏதாவது அபூர்வமாக சில கேஸ்களில் உபத்திரவம் இருக்கலாம். ஆனால் காலிபர் பூட்ஸ் போடுவதில் அதிலும் சிறு வயதிலேயே போட்டுக் கொள்வதில் ரொம்ப அனுகூலம் உண்டு.



"தீபாவளிக்கு ஸ்கூட்டர் வாங்கிக் கொடுத்த உன் மாமனார் பொங்கலுக்கு என்ன செஞ்சார்?"
"அதை உதைக்க ஸ்டார்ட் பண்ணிக் குடுத்தார்!"
-அ' இராமதாஸ்

சந்திர: இன்னொரு பிரச்னை திருமணம்!

ராம: கரெக்ட். ஊனமுற்ற ஆண்களைப் பெண்கள் மணந்து கொள்கிறார்கள். ஆனால் ஊனமுற்ற பெண்களை, ஆண்கள் மணந்து கொள்ள முன்வருவதில்லை. இந்தப் போக்கு மாற வேண்டும்.

ஷரீன்: இதற்கு ஆண்களின் சுயநலம்தான் காரணம். பெண் பார்க்கும் படலத்தை நடத்துவதே பெண் ஊனமில்லாமல் இருக்கிறாளா சரியாகப் பேசுகிறாளா? பார்க்கிறாளா? என்று சோதனை செய்யத்தானே?

வரத: ஊனமுற்ற பெண்களை ஊனமுற்ற ஆண்கள் மணந்து கொள்ளலாமே. இதனால் திருமணப் பிரச்னை வெகுவாகக் குறையுமல்லவா?

ஷரீன்: நான் இந்த எண்ணத்தைக் கடுமையாக எதிர்க்கிறேன்.

ராம: இதில் நானும் ஷரீன் கட்சி. இந்நிலை வருமாயின் அதைவிடப் பரிதாபம் வேறு எதுவுமே இருக்க முடியாது.

சந்திர: உண்மைதான். ஊனமுற்றிருப்பவர்களை ஆரோக்கியமானவர்கள் தைரியமாகத் திருமணம் செய்து கொள்ள முன்வரவேண்டும். ஊனம் ஒன்றிருப்பதைக் குறையாக எண்ணாத அளவு இவர்களுக்கு மனப் பக்குவம் இருக்க வேண்டும். ஊனமுள்ளவர்களிடம் அவர் ஊனத்தை நினைவூட்டிக் கொண்டே இருப்பது போல் அளவுக்கு மீறிப் பரிவு காட்டவும் அவசியமில்லை. இயல்பாக நடந்து கொண்டு அன்பு செலுத்தும் வாழ்க்கைத் துணைவனே ஓர் ஊனமுற்ற பெண்ணுக்குத் தேவை. ஊனமுற்றிருக்கும் ஓர் ஆணின் நிலையும் இது தான்.

உரையாடல் தொகுப்பு: "சிக்கி"

படங்கள்: உத்ரா

## திருச்செம்பூர் திருமுருகன் திருக்கோயில்

# கோடி அர்ச்சனை

பம்பாய் மாநகரில் செம்பூர் பகுதியில் முருகப் பெருமானுக்கு முதன் முதலாக ஆகம விதிப்படி சிற்ப சாஸ்திரப் பிரமாணங்களோடு 51 அடி உயரத்தில் 108 படிகள் கொண்ட அழகான ஆலயம் ஒன்றை ஸ்ரீ சுப்பிரமணிய சமாஜம் நிறுவியுள்ளது.

ஆறுபடை வீடு கொண்ட ஆறுமுகப் பெருமானது ஏழாவது படை வீடு என பக்தர்கள் இதைப் போற்றுகிறார்கள்.

**ஸ்ரீ பரமாச்சார்யாள்** அருளாசியோடு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு **ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்** பாத யாத்திரையாக வந்து இக்கோயிலின் மகா கும்பாபிஷேகத்தை சென்ற 1980ம் ஆண்டு ஜனவரி மாதம் 24ம் தேதி சிறப்பாக நடத்தி வைத்ததை பக்தர்கள் அறிவார்கள்.

இந்தத் தெய்வீகத் திருப்பணி விரைவில் பூர்த்தியடையவும், பெருவாரியான பக்தர்கள் இந்தத் திருப்பணியில் பங்கு கொள்ள வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தோடும் முருகப் பெருமானுக்கு **கோடி அர்ச்சனை** துவங்கப்பட்டு நடைபெற்று வருகிறது. கோடி அர்ச்சனை மூலம் பக்தர்களுக்கு முருகப் பெருமான் அருளும் திருப்பணிக்கு நிதி உதவியும் கிடைக்கும். கோடி அர்ச்சனை பூர்த்தியடைய 10,000 சகஸ்ரநாம அர்ச்சனைகள் செய்தல் வேண்டுமாதலால் ஆஸ்திகப் பெருமக்கள் அனைவரும் இந்த தெய்வ கைங்கர்யத்தில் ஈடுபட்டு கோடி அர்ச்சனையை விரைவில் பூர்த்தி செய்ய உதவ வேண்டுகிறோம்.

கோடி அர்ச்சனையில் பங்கு கொள்ள ஒரு சகஸ்ரநாம அர்ச்சனைக்கு ரூ. **21/-** வீதம் கீழ்க் கண்ட விலாசத்திற்கு அனுப்பி அர்ச்சனை செய்பவர் பெயர், விலாசம், நட்சத்திரம், கோத்திரம் முதலிய விவரங்களையும் அனுப்பவும். பிரசாதத்தை நேரிலும் தபாலிலும் பெறலாம்.

*பணம் அனுப்ப வேண்டிய விலாசம் :*

**The Hon. Secretary, Sri Subramania Samaj**
**Temple Complex, Chheda Nagar, Chembur,**
**BOMBAY – 400 089**

---


Dr. S. R. சிவராஜ்

**வாலிபர்கள் !** **மணமானவர்கள் !!**

**வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பலஹீனங்களை நீக்கி,**
**தாம்பத்திய வாழ்வை இன்பமுடன் அனுபவித்து மகிழ,**
**இன்றே புகழ் பெற்ற 'ரகசிய வியாதி நிபுணர்'**
**ஆண்மைக் குறைவு நீக்கும் 'அரிய வைத்திய மேதை'**

## 'கவிராஜ்' டாக்டர் S. R. சிவராஜ், R.I.M.P.

*அவர்களிடம் சிறந்த முறையில் சிகிச்சை பெற, அவர் சுற்றுப்பயண முகாம்களில் நேரில் சந்தித்து வாழ்வில் மகிழ்ச்சி காணுங்கள். நேரில் சந்திக்க முடியாதவர்கள், குறைகளை விபரமாகத் தலைமை அலுவலகத்துக்கு எழுதவும். (கடிதங்கள் ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.) மருந்துகள் விரிவான விளக்கங்களுடன் வி.பி.பி. மூலம் அனுப்பி வைக்கப்படும்.*

- **குழந்தை பாக்கியம் (கர்ப்ப அணுக்கள்) இல்லாதவர்கள்**
- **கல்யாணமாகி பல ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியமே இல்லாதவர்கள்**

*சிறந்த முறையில் சிகிச்சை பெற்று, கர்ப்ப அணுக்கள் தேவையான அளவு உற்பத்தியாகி குழந்தை பாக்கியம் பெற்று மகிழ்ச்சியடையும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். 25 வருட சுற்றுப் பயணத்தில், அவரிடம் சிகிச்சை பெற்றுப் பலன் அடைந்தவர்கள் பல்லாயிரம் பேர்கள். அவர்களைப் போல் நீங்களும் பலன் அடைய வேண்டுமல்லவா?*

**விரைவில் பலன் காண விசேஷ 1 மாத சிகிச்சை ★ குறைந்த ஸ்பெஷல் 1 மாத சிகிச்சை**

| A-வகுப்பு | B-வகுப்பு | C-வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1-ம் நெம்பர் | நேரில் பெறலாம் |
|---|---|---|---|---|---|---|
| ரூ. 350-00 | 250-00 | 175-00 | 115-00 | 90-00 | 75-00 | V.P.P.யிலும் பெறலாம் |

**தலைமை அலுவலகம் :**

## சிவராஜ் சித்த வைத்தியசாலை

**C-56, தமிழ்ச் சங்கம் ரோட் பின்புறம்**
*(சென்ட்ரல் டாக்கீஸ் வடபுறமுள்ள ஏரியின் முன் பக்கம்)*
**காந்தி ஸ்டேடியம் - சேலம்-636007**

# கடமை - கடைசிவரை



பி.ரேவ்ஸ்கி

இது நடந்தது 1942ல்.

ராணுவ ஆஸ்பத்திரி ஏற்கனவே நிரம்பி வழிய, போர் முனையிலிருந்து இன்னொரு அடிபட்ட சிப்பாயை அங்கே கொண்டுவந்து சேர்த்தார்கள். கறுப்பா – சிவப்பா, கிழவனா – இளைஞனா என்று அறிய முடியாத அளவுக்கு உடலும் முகமும் பாண்டேஜ் போட்டுக் கட்டப்பட்டிருந்தது. சோர்வடைந்த கண்கள் அவ்வப்போது திறந்தாலும், அவன் நினைவின்றிக் கிடக்கிறான் என்று பார்க்கும்போதே தெரிந்தது.

டாக்டர் வந்து பார்த்துவிட்டு, "இவன் எப்படி இன்னும் உயிரோடு இருக்கிறான்? ஆச்சரியம்தான்!" என்றார்.

அவன் மார்பு மெலிதாகத் துடிப்பதுதான் அவன் உயிரோடு இருப்பதைக் காட்டிற்று. திடீரென்று அவனுக்கு நினைவு வந்த மாதிரி சிலிர்த்துக் கொண்டான். புரண்டான். பாண்டேஜ் போட்டுக் கட்டியிருந்த வலக் கரத்தை மெல்லத் தூக்கி அருகிலிருந்த ஸ்டாண்ட் மீது வைத்தான்.

"டக்டக்டக்... டக்டக்... டக்டக்டக்..."

நிலவியிருந்த அமைதியைக் கிழித்துக் கொண்டு கேட்டது இந்தச் சத்தம். அருகிலிருந்த மற்ற சிப்பாய்களுக்கு ஒன்றும் புரியவில்லை. அடிபட்ட சிப்பாய் இப்போது கையில் ஒரு கறுப்புப் பித்தானை வைத்துக் கொண்டு தட்டிக் கொண்டிருந்தான்.

"இது என்னடா ரோதனையாப் போச்சு!" என்று சிஸ்டரைக் கூப்பிட்டான் ஒரு சிப்பாய்.

நர்ஸ் விரைந்து வந்து, தட்டிக்கொண்டிருந்த சிப்பாயின் கையை எடுத்துப் படுக்கையின் மீது வைத்து விட்டுப் போனாள்.

பதினைந்து நிமிடம் கூட ஆகியிருக்காது. மறுபடியும் மரங்கொத்தி மாதிரி டக்டக்டக் டக்டக்டக் என்று ஆரம்பித்து விட்டான். நர்ஸ் கையைத் தூக்கிக் கட்டிலோடு சேர்த்து வைக்க, மறுபடி மறுபடி அந்தச் சிப்பாய் விடாமல் தட்டிக் கொண்டிருந்தான். ஆகாரம் உண்ணாமல், வாய் திறந்து பேச இயலாமல் கண் மூடி.... கைமட்டும் தட்டுகிறது – உயிரே அதில்தான் இருக்கிற மாதிரி.

மறுநாள் இன்னொரு சிப்பாய் வந்து இவன் கட்டிலருகே அமர்ந்தபோதும், இந்த டக்டக் சத்தம்.

புதிய சிப்பாய் கவனமாகக் கேட்டான்: டக்டக்டக்... டக்டக்... அவன் ஒயர் லெஸ் பிரிவைச் சேர்ந்தவன். வார்த்தை வார்த்தையாக அந்த டக் டக்கில் வெளிவந்த செய்தியை உரக்கச் சொல்லிப் பார்த்துக் கொண்டான்:

"மூன்று? மூன்றுதானே?... நான் ஏழு... வெடி மருந்துகள் தீர்ந்து கொண்டிருக்கின்றன. உடனடியாக அனுப்பி வையுங்கள். வெடிமருந்துகள்... உடனடியாக... இது ஏழு என் செய்தியைப் படித்தீர்களா? படித்தீர்களா என் செய்தியை?"

அந்த வராந்தாவில் அசாதாரண அமைதி. இதுவா இந்தச் சிப்பாயை அலைக்கழித்துக் கொண்டிருக்கிறது? போர் முனையில் இவனிடமும் இவனது சகாக்களிடமும் வெடி மருந்துகள் தீர்ந்து போய்விட்டன. அந்த உறுத்தலா இவன் மனசைக் குடைந்து விரல் வழியே செய்தி அனுப்புகிறது!

குபீரென்று எழுந்தான் புதிதாக வந்திருந்த சிப்பாய். சற்றுத் தள்ளிப் போய் நின்றுகொண்டு சிகரெட் லைட்டரால் மேசை மீது தந்தி யொலி எழுப்பினான். பதிலாக. டக்டக்... டக் டக்டக்...

"ஏழு... ஏழு! உன் செய்தி கிடைத்தது. வெடிமருந்துகளும் வெடிகுண்டுகளும் அனுப்பியிருக்கிறோம்.... எல்லாம் சரியாகவே நடந்து கொண்டிருக்கிறது தோழனே...."

பாண்டேஜால் உடல் முழுக்கக் கட்டுப்பட்டு, நினைவிழந்து கொண்டிருந்த 'ஏழு'க்கு உடம்பு ஓர் உதறல் உதறிற்று. நர்ஸ் ஓடி வந்து பிடித்துக் கொண்டாள். அவன் சரியாகப் படுத்துக்கொள்ள உதவினாள். அவன் கண்கள் அமைதிப்பட்டன. உதடு கோணவில்லை. நிம்மதியோடு கிடந்தான் அவன்.

அவ்வளவுதான். நினைவு தவறினாலும் கடமை உணர்ச்சி தவறாத ஒரு சிப்பாயின் பணியை நிறைவேற்றிவிட்ட நிம்மதி அவனிடம் தெரிந்தது. இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு அந்தச் சிப்பாயின் உயிர் மெல்லப் பிரிந்தது.

-ருஷ்யச் சிறுகதை ஆங்கிலத்திலிருந்து

தமிழாக்கம்: சாருகேசி





# Agfa Photography at f/22



The Agfa Isoly-II gets every detail of a landscape or a temple. Close the aperture down to f/22 to get the greatest possible depth of field. Set the shutter speed at 1/100 second and the distance at infinity. Use slow film for greater sharpness—125 ASA. The result? A picture where every detail—from 3m. to as far as the eye can see—is perfect.

The Agfa Isoly-II is a great all-round camera. You simply adjust settings, distance and film to freeze a sports scene, get close enough to snap a leopard snarling or take a perfect picture in dim, soft light.

The Agfa Isoly-II is built to German specifications and undergoes over 100 exacting tests.

See this fine camera today at your friendly Agfa-Gevaert dealer.

**ISOLY-II**

*for professional results.*







**AGFA-GEVAERT INDIA LIMITED**

Registered Office: Merchant Chamber, 41 New Marine Lines, Bombay 400 020 • Branches: Bombay New Delhi • Calcutta • Madras • ® Registered Trademarks of Agfa-Gevaert, Antwerp/Leverkusen.

1st for everything in photographics

SIMOES/AG/4A/80

# மனசு ஊனமாகக் கூடாது

**உடல் ஊனமுள்ளவர்களுக்கு மனத்தில் ஏதேனும் கோளாறு வர வாய்ப்பு உண்டா? அந்தக் கோளாறுகளுக்கான மாற்று என்ன? டாக்டர் விஜயகுமார்—சைக்கியாட்ரிஸ்டை—மனோதத்துவ நிபுணரைச் சந்திக்கிறோம். சன்னமான குரலில் பேசுகிறார்:**

முதலில் கை கால் முடமானவனை எடுத்துக்கொள்வோமா? அவனால் மற்றவர் மாதிரி விளையாட்டில் இயல்பாகக் கலந்துகொள்ள முடியாது. பிறர் போல் சர்வ சாதாரணமாக வளைய வர முடியவில்லையே என்ற ஏக்கம் கவ்விப் பிடிக்கும். காற்றோட நடந்து இயற்கை அளித்த செல்வங்களை ரசிக்க அவனால் இயலாது. இதனால் என்ன ஆகிறது? அவனுடைய மொத்தப் பொழுது போக்கும் வீட்டிலேயே அடைபட்டுப் போகிறது. செஸ், பிரிட்ஜ் போன்ற மனத்துக்கு வேலை கொடுக்கும் ஆட்டங்களிலேயே கவனம் திரும்புகிறது. போகப் போக, ஒரு தாழ்வு மனப்பான்மை அவனைப் பற்றுகிறது.

இது தவிர்க்க முடியாத ஒன்றல்ல. தவறு அவனிடம் மட்டுமல்ல. நம்மிடமும் உள்ளது. இயன்றவரை அவனுடைய உடற் குறைகளைப் பொருட்படுத்தாமல், மற்ற நிறைகளைப் போற்றிப் பழக வேண்டும். குறைகளைச் சுட்டிக் காட்டவே கூடாது. பள்ளிகள் கல்லூரிகளிலும் சரி; பொது இடங்களிலும் சரி, இவர்களையும் சமமாக மதிக்கும் மனப்பான்மை வளர வேண்டும். பொதுவாக, தாழ்வு மனப் பான்மையுடன் உலவி வருபவர்கள் ஒரு விதம் என்றால், இதற்கு மாறாகத் தன்னுடைய குறையையே ஒரு சவாலாக ஏற்று வெற்றி காணுகிறவர்கள் வேறு விதம். They over react. ஒரு கை இல்லையா? அதனால் என்ன? மற்ற கையை வைத்துக் கொண்டு என்ன செய்கிறேன் பார் என்று ஒரு வீம்புடன் காரியத்தைச் சாதிக்கிறார்கள். இதற்கெல்லாம் வீட்டில் பெற்றோர்கள் அளிக்கும் ஊக்கமும், அங்கு நிலவும் நல்ல சூழ்நிலையும்தான் முக்கிய காரணம்.

போலியோவால் பாதிக்கப்பட்ட பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரர் சந்திரசேகர், இந்திய கிரிக்கெட் வரலாற்றிலேயே சரித்திரம் படைக்கவில்லையா? பெங்களூரில் கை, கால் முற்றும் பாதிக்கப்பட்ட ஒருத்தி, 'இன்டியன் இன்ஸ்டிட்யூட் ஆஃப் சயன்ஸி'ல் படித்து, அமெரிக்காவில் பி.எச்.டி. செய்கிறார். இதற்கு அவர் தாயார் கொடுத்த ஆதரவே முக்கிய காரணம்.

இன்னொரு விஷயம். இது போல் குறை உள்ளவர்களுக்கு அதை ஈடுகட்டுவது போல் மற்ற உறுப்புகள் நிச்சயம் நன்றாகச் செயல்படும்.

கண் பார்வை மிகக் குறைவாக உள்ள சிறுவன். ஆனால் அவனது ஞாபக சக்தியும், செவிக் கூர்மையும் மிக அபாரம். ஒரு தரம் தாயார் சொல்லிக் கொடுத்து விட்டால், அப்படியே தவறாது எழுதி விடுவான். பரீட்சையில் ஓர் எழுத்துக்கூடப் பிசகாமல் எழுதினவுடன் ஆசிரியருக்கு அவன் மீது சந்தேகம் ஏற்பட்டு, 'காப்பி அடித்தான்' என்றெண்ணி வீட்டுக்கு அனுப்பிவிட்டார். தாயார் இதைக் கேள்விப்பட்டவுடன் பள்ளிக்கூடத்துக்கு வந்து ஆசிரியரிடம் வேறு பாடத்தில் கேள்வி கேட்கும்படி கூறினாள். அவன் மறுபடியும் தவறில்லாமல் எழுதினான். ஆசிரியருக்கு நம்பிக்கை பிறந்தது.

இன்று அந்த மாணவன் ஒரு டாக்டர். ஒரு மனோதத்துவ நிபுணராக அமெரிக்காவில் பணிபுரிகிறான். சர்ஜனைப் போல அல்லது மற்ற பிரிவினரைப் போல இந்தப் பிரிவுக்குக் கண் பார்வை அதிகம் தேவைப்படாது. பொறுமையும், காது கொடுத்துக் கேட்கும் அவகாசமும்தான் நிறையத் தேவை என்பதால் இதைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான்.

பிறவியிலேயே குழந்தை செவிடாயிருந்தால் துவக்க காலத்திலேயே டாக்டரை நாடிக் குறையை நீக்க முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். இல்லையேல் குழந்தை ஊமையாகவும் வளரும். பேச்சு வருவதே கேட்பதை வைத்துத்தான்.

சமூகம் ஊனமுள்ளவர்களை ஓர் அங்கமாகப் பாவித்து மற்றவர்களைப் போல இயல்பாக நடத்தி, ஊக்கம் தரவேண்டும். அப்படிச் செய்தால் நிச்சயம் அவர்கள் தாழ்வு மனப்பான்மை இன்றி எல்லோரையும்போல வாழ்வார்கள்.

பேட்டி : தமயந்தி
படம் : சுபா போட்டோ

✖ டாக்டர் விஜயகுமார்



# கழுத்தில் விழுந்த மாலை

லக்ஷ்மி

## முன்கதை

திருத்தணியில் ஜயந்திக்கும் ஹர்ஷனுக்கும் மாப்பிள்ளை வீட்டவர்களை எதிர்த்து நடத்தும் திருமணம். கல்யாணமண்டபத்தில் பெரியப்பா சமதிக்கு எடுபிடி ஆளாக அல்லாடிக் கொண்டிருக்கிறாள் மாதங்கி. பெற்றோர்கள் உயிருடன் இல்லாததால் பெரியப்பா தயானந்தன் ஆதரவில் வளர்ந்து வருபவள் மாதங்கி. மாப்பிள்ளை வீட்டார்கள் தங்கியிருந்த இடத்துக்குப் பெண்ணுக்குப் பூ வாங்கி வர வந்த மாதங்கி, மாப்பிள்ளைப் பையன் ஹர்ஷனைச் சந்திக்க நேரிடுகிறது! அவனோடு வெகுநேரம் பேசிக்கொண்டு இருக்கக் கூடாதா என்ற ஏக்கம் மாதங்கிக்கு. பிறகு அது எட்டாக்கனி என்ற நினைவும் எழுகிறது அவளுக்கு.

பரிசம் போடப்பெண்ணை அழைக்க நினைக்கும் போது ஜயந்தியைக் காணவில்லை!

சம்பந்தியம்மாள் கஸ்தூரி ஏற்கெனவே ஹர்ஷனுக்கும் ஊர்மிளாவுக்கும் நடக்கவிருந்த நிச்சயதார்த்தம் நின்று போய்த் தவித்து உருகியவள். பொறுப்பே இல்லாத ஊர்மிளாவைக் கஸ்தூரிக்குப் பிடிக்கவில்லையானாலும் ஹர்ஷனின் காதலுக்கு இடையூறாக நிற்க அவள் விரும்பவில்லை. ஆனால் ஊர்மிளாவின்தந்தையோ நிச்சயதார்த்த ஏற்பாடுகள் நடக்கும் தருணத்தில் அந்தப் பேரிடியைத் தூக்கிப் போட்டுவிடுகிறார். ஹர்ஷனுக்கு ஒரே துயரமயம்! கல்யாணம் என்றாலே அவனுக்கு வெறுப்பு ஏற்படுகிறது! தாயாரின் வற்புறுத்தலுக்காகப் பிறகு ஹர்ஷன் ஜயந்தியை மணக்க முன் வருகிறான். பெரிய கார்விபத்திலிருந்து தப்பிய ஹர்ஷனுக்கு, ஊர்மிளாவின் துரோகத்திலிருந்து மீள்வதற்கு உதவிய முருகப் பெருமானின் திருத்தணித் தலத்தில் திருமணம் நடத்த முன்வருகிறாள் கஸ்தூரி.

திருத்தணி முருகன் திருத்தலத்தில் ஜயந்தியும் மற்றொரு பேரிடியை ஹர்ஷனுக்குத் தருகிறாள்! "நான் என் காதலருடன் பம்பாய்க்குப் பயணப்படுகிறேன். இந்தக் கல்யாணத்தில் சிறிதும் விருப்பமில்லை!" என்று அறிவிக்கிறது அவள் கடிதம்.

பெண்ணின் தந்தை தயானந்தன் சம்பந்தியம்மாள் கஸ்தூரியிடம் இந்தத் துயரச் செய்தியைத் தெரிவிக்கிறார். சம்பந்தியம்மாள் கஸ்தூரி இந்த இரண்டாவது இடியை ஹர்ஷன் எப்படித் தாங்கிக் கொள்ளப்போகிறான் என்று தவிக்கிறாள்.

மேலே கதையைப் படியுங்கள்.

## 3

சம்பந்தி தயானந்த் தமது சட்டையைப் பற்றி மெல்ல இழுத்து 'இப்படி வாங்கோ' என்று மெல்லிய குரலில் காதருகே பேசியதைக் கேட்டு வேதாசலம் வியப்புடன் திரும்பினார்.

எப்பொழுதுமே இரைந்து பேசிப் பழக்கப் பட்டவர். ''இதென்ன கிசுகிசு? பரிசம் போடும் சமயத்தில் தயானந்த்தகராறு செய்ய நினைக்கிறானா? அவருக்கு ஆத்திரமும் கோபமும் தோன்றின.

'நகை போதாது – அது இதுன்னு ஏதோ ஆரம்பிக்கப் போறான். அப்பவே சொல்லணும்னுதான் இருந்தேன். இந்தக் காலத்தில் கைநிறைய வரதட்சிணை, கார், பங்களான்னு கொடுத்து, பெண்ணையும் கொடுக்கப் பெற்றவன் வரிசையில் நிற்கும்போது நாம் ஏன் இப்படித் தாழ்ந்து வலியப் போகணும்னு கஸ்தூரி கிட்டக் கேட்கணும்னுதான் துடிச்சுக்கிட்டிருந்தேன். நேரமில்லே. எல்லாம் ஒரு அவசரம். என்னவோ கொள்கைன்னுட்டுப் பிடிவாதமா எல்லாத்தையும் தன் தலையில் போட்டுக்கிட்டா... இப்போ சம்பந்தி ஒரு கொம்பிலே ஏறி உட்கார்ந்து கொண்டு எல்லாரையும் விரட்டறானா?...'

கணப் பொழுதில் பலவும் எண்ணிய வேதாசலம் வெகுண்டு முகத்தைச் சுளித்தார்.

''என்ன விஷயம்? இங்கேயே சொல்லுங்க பரவாயில்லே'' என்று அதட்டினார்.

''நாலு பேர் நடுவே பேச முடியாத சங்கதி உங்க தங்கச்சி கூப்பிடறாங்க''–மறுபடியும் தயானந்த் காதுக்குள் மெல்லச் சொன்னார்.

அடிவயிற்றிலே சில்லென்ற உணர்வில் அதிர்ந்து போனார் வேதாசலம்.

இடுப்பிலே இருக்கமாக சட்டை மீது கட்டிக்கொண்டிருந்த மேல் துண்டை அவிழ்த்துத் தோளில் உதறிப் போட்டுக் கொண்டார். மூச்சு நின்றுவிடும்போன்றதொரு படபடப்புடன் சாமான் வைத்திருந்த அறைக்குள் விரைந்தார்.

பழக்கூடை அருகே கிடந்த அரிசி மூட்டை மீது கஸ்தூரி உட்கார்ந்திருந்தாள். பக்கத்திலே அவளது புத்தம் புது காஞ்சிபுரப் பட்டுச் சேலை மீது தொட்டுக் கொண்டு ஒரு சரி பிடித்த அண்டா வைக்கப்பட்டிருந்தது.

''பத்திரம் – புடவைத் தலைப்பை இழுத்துக்கோ... கரி பட்டுடப் போறது'' – எச்சரித்தபடி அருகில் ஓடிவந்து நின்றார் அண்ணன்.

''மூஞ்சியிலே கரி பூசிட்டா அண்ணா! புடவையையாவது தோய்ச்சுச் சரிப்படுத்திக்கலாம். ஆனால்...'' அதற்கு மேல் பேச முடியாமல் கஸ்தூரிக்கு அழுகை பொத்துக் கொண்டு வந்தது.

வெளிறடைந்துவிட்ட அவளது முகம்– நீர் ததும்பிய கண்களும் அவள் பேச்சும் ஏதோ விபரீதம் நடந்துவிட்டது என்பதை அறிவுறுத்தவே வேதாசலம் சாமான் அறைக் கதவைத் தாளிட்டுவிட்டுச் சகோதரி அருகே தரையில் வந்து உட்கார்ந்தார். சற்றுத் தள்ளியபடி சுவர் ஓரமாகத் தயானந்த் தவித்துக்கொண்டு நின்றார்.

தன்னிடமிருந்த அந்தக் கடிதத் துண்டை அண்ணனிடம் கொடுத்து அடக்க மாட்டாது விம்மி விட்டாள் கஸ்தூரி.

வேதாசலம் வேகமாக அதைப் படித்து விட்டுக் கோபத்துடன் தயானந்தை வெறித்துப் பார்த்தார்.

''இது நிஜமா? இப்படி எங்களை அவமானப்படுத்தறதுக்கு அந்தப் பொண்ணுக்கு எத்தனை துணிச்சல்! பிடிக்காத இடத்திலே கட்டிக் கொடுக்க உங்க பெண்ணை நீங்க ஏன் வற்புறுத்தணும்? இந்தச் சமாசாரத்தை நாங்க சும்மா விட மாட்டோம்.'' படபடவென்று கொஞ்சம் உரத்த குரலில் ஆத்திரமாகக் கத்திவிட்டார்.

''அண்ணா! இப்போ இது சண்டை போடற விஷயம் இல்லே. மானம் போற சங்கதி.'' விம்மலில் குலுங்கினாள் தங்கை.

''கஸ்தூரி... என்னத்துக்கு அழுகிறே... அவமானம் நமக்கு மட்டுமில்லே. சொல்லப் போனா பெண்ணைப் பெத்தவர்தான் நம்மை விட இரண்டு பங்கு வெட்கப்பட்டுக் கொண்டு அழணும். போகட்டும். இந்தப் பொண்ணு இல்லாட்டி இன்னொரு பொண்ணு நம்ம பையனுக்குக் கிடைக்காமலா போயிடும்...'' அடிக் குரலில் அதட்டினார்.

''கல்யாணப் பொண்ணு... கத்தரிக்காயா வெண்டைக்காயா? சட்டுன்னு கடையிலே போய் வாங்கிட்டு வந்துட? பரிசம் போடறதைப் பார்க்க எல்லாரும் வரப்போற சமயத்திலே... எல்லார் முன்னாலும் இப்படி ஒரு அவமானமா... அதை நினைச்ச...'' மேலே பேச முடியாது திணறினாள்.

''ஊர்ல உலகத்திலே நடக்காத அதிசயம் முதல் தடவை நம்ப வீட்டுக் கல்யாணத்திலே நடந்து விட்டதாக நினைக்காதே கஸ்தூரி! உனக்கு ஞாபகம் இருக்கா — நம்ப கிராமத்திலே மேலத் தெரு சுப்பையா மகன் கல்யாணத்தின்போது கல்யாணப் பெண் திடீர்னு காணாமப் போயிட்டா... அவர் பயந்துக்கிட்டுக் கல்யாணத்தை நிறுத்தி விடலையே? தன் அக்கா மகளை மணையில் உட்கார வைச்சு ஜாம் ஜாம்னு நடத்தி முடிச்சுட்டாரே...!

''என்ன சொல்றீங்க அண்ணா!'' — தழுதழுத்தாள் கஸ்தூரி.

''தைரியமா இரு. மலைபோல ஓர் அண்ணன் நான் இருக்கச்சே நீ ஏன் கலங்கணும்?'' என்று ஆறுதல் கூறிய வேதாசலம் கோபமாகத் தயானந்தின் பக்கம் திரும்பினார்.

''மரமாட்டம் அப்படி நின்னா என்ன அர்த்தம்? இப்படி வாங்கோ. இந்த விஷயத்தை நம்மோட ரகசியமா வச்சுக்குவோம். ஒரேமுட்டா அமுக்கிட முடியாது. பின்னாலே மெள்ள எல்லாருக்கும் தெரிஞ்சாக் குத்தமில்லே. இப்போ எனக்கு ஒரு யோசனை தோணுது. உங்களுக்கு இதுக்கு அடுத்தபடியா கல்யாணத்துக்குப் பெண் இருக்கா?''

தயானந்த் தலையைச் சொறிந்து கொண்டார். ''எனக்கு ஜயந்திதான் கடைக்குட்டி. எங்க வீட்டிலே எங்களோட இப்ப இருக்கிறது என் தம்பி மக ஒருத்திதான்.''

''அந்தப் பொண்ணுக்கு வேறே இடத்திலே கல்யாணம் பேசி முடிச்சிருக்கீங்களா?''

''இல்லே...'' — மென்று விழுங்கினார் தயானந்த். தம் மகளுக்குப் பார்த்து நிச்சயம் செய்த மாப்பிள்ளையை மாதங்கிக்கு விட்டுக் கொடுப்பதா? — அவர் மனத்திலே லேசாக எரிச்சல் மூண்டது.





# மீண்டும்

90% நடக்கக் கூடிய நயமான படம். மனைவி கோகிலாவிடம் உயிராய் இருக்கும் வக்கீல் கணவன். நடிகை காமினியின் நட்புக் கிடைத்ததும் சபலப்பட்டுக் கடைசியில் மீண்டும் கோகிலாவிடம் வரும் சின்னக் கதையை எல்லோருமாய்ச் சேர்ந்து சுவாரஸ்யமாக்கி விட்டார்கள்.

தீர்ந்த பேஸ்டைக் குடைந்து எடுக்கும் இயல்பான கமலிடம் நம்மைப் பார்க்கிறோம். ஆபீஸில் ஈ ஓட்டி, தன் 'கோகி'யிடம் எதிரும் புதிருமாய் ஊஞ்சலில் ஆடி, அர்ச்சகர் தொடச் சொன்னதும் குறும்போடு அவரைத் தொட்டு, காமினியிடம் அறுவையாக அளந்து, மனைவி வயிற்றை அடிக்கடி ஆசையாய்க் கிள்ளி பரவலாக 'வசந்த்' ஸ்டைலில் செக்ஸ் பேசி, முழுக்க முழுக்க கமல் கொடி கட்

''இவருக்குத் தம்பி மகள் ஒரு பெண் இருக்கு. இவர் ஆதரவிலேதான் வளருகிறாள். பெண் பார்க்கப் போனபோது சம்பந்தியம்மா சொன்னாங்க. சித்த முன்னே கூட அந்தப் பெண்ணைப் பார்த்தேன். மூக்கும் முழியுமா நல்லாவே இருக்கா அந்தப் பொண்ணு. ஆனா ஹர்ஷன் இதுக்கு ஒத்துக்கணுமே?''

''நீ சும்மா இரு கஸ்தூரி. அவனைச் சமாளிக்கிறது என் பொறுப்பு.''

''என் மனைவி என்ன சொல்வாளோ?''

''என்னய்யா விளையாடு றீங்க... இத்தனை பெரிய அவமானத்திலே எங்களை மாட்டி வைச்சுட்டு, பரிகாரம் சொன்னா பசப்புறீங்க. உங்க மனைவிக்கிட்டச் சொல்லி அந்தப் பொண்ணைப் புதுசு கட்டிக்கிட்டு மண்டபத்துக்கு வரச் சொல்லுங்க...''

''மாதங்கி சம்மதிக்காட்டி....''

''சம்மதிக்க வைக்கிறதும் உங்க பொறுப்பு. இந்தக் கதை யெல்லாம் வேண்டாம். எங்களுக்கு இந்தக் கல்யாணம் நடந்தாகணும்.''

''கஸ்தூரி கண்களைத் துடைச்சுக்கோ... எழுந்திரு. சீக்கிரமா எல்லாத்தையும் கவனி. நான் போய் ஹர்ஷனைக் கண்டு பேசி அழைச்சிட்டு வரேன்.'' துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு கிளம்பினார்.

கணவன் கூறியதைக் கேட்ட சுமதிக்குப் பேயறைந்துவிட்ட அதிர்ச்சி. ''இந்தப் பெண் ஜயந்தி இப்படி ஒரு கல்லைத் தூக்கித் தலையில் போடுவாளா? ஒரு கோடி காட்டியிருந்தாக்கூடக் கல்யாணம் வரை வந்து இப்படி ஒரு அவமானத்திலே சிக்கியிருக்க வேண்டாமே....'' மனம் புழுங்கிப்போனாள்.

மாதங்கிக்கு இப்படி ஓர் அதிர்ஷ்டமா என்று பொறுமையால் கொதித்துப்போனாள்.

''உன் அக்கா செஞ்ச வேலையால உனக்கு இப்ப யோகம் — அந்தப் பெண்ணுக்குப் பதிலா உன்னை வெச்சுக் கல்யாணம் நடத்தணும்னு சம்பந்தி வீட்டிலே ஒரே பிடியா இருக்காங்க. நீயும் சமயத்துக்குக் கழுத்தை அறுத்திடாதே. இஷ்டம் இல்லாட்டி இப்பவே சொல்லிடு — பிடிச்சா அந்தப் பட்டுப் புடவையை எடுத்துச் சுத்திக்கிட்டு கிளம்பு..'' மெல்லிய குரலில் சீறினாள் கோபத்துடன்.

கல்யாண மண்டபத்துக்குள் தயங்கிக் கொண்டு வந்த மாதங்கியை முன்வந்து பிள்ளை வீட்டைச் சேர்ந்த அந்தப் பெண் கையைப் பற்றிக்கொண்டு உள்ளே அழைத்துச் சென்றாள்.

''நீதான் கல்யாணப் பொண்ணுன்னு... பூ கொடுக்க வந்தப்பவே கண்டு பிடிச்சுட்டேன்.!'' மகிழ்ச்சியோடு ஆர்ப்பரித்தாள்.

வேதாசலமும் தயானந்தும் ஜமக்காளத்தில் எதிர் எதிராக அமர்ந்து கொண்டனர். எல்லாரும் சுற்றிலும் சூழ்ந்து உட்கார்ந்ததும் மாப்பிள்ளை வீட்டுப் பெண்களில் சிலர் புடவை நகைபெட்டிகளைக் கொண்ட தட்டுக்களை வரிசையாகச் சுமந்து வந்து அருகில்வைத்தனர். குத்து விளக்கைத் தூண்டி நன்றாக எரிய விட்டாள் பெண்.

நாதஸ்வரம் ஓய்ந்து மண்டபத்திலே ஆவல் நிறைந்த அமைதி நிலவியது. இரண்டு சம்



## கோகிலா

டிப் பறக்கிறார். வெல்டன் கமல்.

அடுத்தது இந்த ஸ்ரீதேவி வரவரத் தன்னையே மிஞ்சுகிறார். மடிசாரில் கணவனுடன் சண்டை போட்டு, காமினி பிரவேசத்தால் சந்தேகப்பட்டு, சபலக் கணவனை வேவு பார்த்து, குழந்தைக்குக் காய்ச்சல் வந்ததும் இயல்பாக அழுது, காமினியைத் திட்டி ஆர்ப்பாட்டம் பண்ணி — கமலுக்கு இணையான ஜோடி.

'தீபாவுக்குப் பதில் ரேகாவே இருந்திருந்தால்' என்ற நினைவே இனிமையாக உள்ளது. நகைச் சுவையுடன் கொண்டு போகும் டைரக்டர் ஜி. என். ரங்கராஜனும், வசன கர்த்தா அனந்தும், சிறப்பான ஒளிப் பதிவாளர் என். கே. விஸ்வநாத்தும் வெற்றியைப் பகிர்ந்து கொள்பவர்கள்.

—நளினி சாஸ்திரி



பந்திகளும் ஒருவருக்கொருவர் சந்தனம் பூசி பொட்டு வைத்து பூமாலை அணிவித்து மரியாதை செய்து முடித்தனர்.

''கிட்ட வாங்க சம்பந்தி... வெற்றிலைப் பாக்கு மாத்திக்குவோம். சபை கேட்கிறப்பல சம்மதம்னு மூணுவாட்டி சொல்லுங்கோ.'' இரைந்து பேசினார் வேதாசலம். ''என்ன கூச்சப்படறீங்க, கிட்ட வாங்கோ'' உரத்துச் சிரித்தார். சபையிலும் வேடிக்கையான பேச்சும் சிரிப்பும் பரவியது.

பாக்கு வெற்றிலை மாற்றி முடிந்ததும் நகை புடவை இருந்த தட்டைக் கையில் தூக்கிக் கொண்டார் வேதாசலம். சுற்றிலும் பெருமையாகப் பார்வையை ஓட விட்டார்.

''எல்லாரும் கேட்டுக்கோங்க — பெண் வீட்டவங்க நல்லாக் கேட்டுக்கட்டும். பெண்ணுக்குப் போடறதாகச் சொன்ன நகைகள் எல்லாம் இந்தப் பெட்டிக்குள்ளே இருக்கு. கழுத்துக்கு ரெண்டு கொத்துச் சங்கிலி — கைகளுக்கு நாலு ஜோடி வளையல்கள்—வைரக் கம்மல், கெம்பு அட்டிகை, பச்சைக் கல் நெக்லஸ் செட்டு — முத்து மாலை, தங்க மோதிரம்... சம்பந்தி நல்லாப் பார்த்துக்கலாம். சரிதானே... எங்கே பெண்ணைக் கூப்பிடுங்கோ... இதுகளை உங்க ஆசிகளோட கொடுக்கணும்.'' அதட்டலாகப் பேசினார்.

மாப்பிள்ளை வீட்டைச் சேர்ந்த அதே பெண் மாதங்கியைக் கைப்பிடித்துஅழைத்துக் கொண்டு வந்தபோது கூடியிருந்தவர்களிடையே ஒரு சலசலப்பு.... இதுதான் கல்யாணப் பெண்ணு? வியப்பு நிறைந்த பல பேச்சுக் குரல்கள் எழுந்தன. மாதங்கி கூடியிருந்தவர்களைப் பார்க்க அஞ்சி, மகிழ்ச்சியும அச்சமும் கலந்த உணர்விலே நெஞ்சு படபடக்க மெல்ல வந்து கைநீட்டிப் பரிசத் தட்டைப் பெற்றுக் கொண்டு வணங்கினாள்.

கண்களில் வழிந்த கண்ணீரைச் சட்டென்று துடைத்துக் கொண்டாள் கஸ்தூரி.

சற்றுத் தொலைவில் ஆண்கள் கூட்டத்தில் உட்கார்ந்திருந்த மகனைப் பார்க்க அவளுக்கு மிகவும் பயமாகத்தான் இருந்தது.

பரிசம்முடிந்ததும் நலங்கு ஆரம்பமாகியது. ஊதா வண்ணப் பனாரிஸ் புடவையை உடுத்திக்கொண்டு நகைகள் அணிந்து கழுத்தில் கனமான ரோஜா மாலையுடன் மெல்ல அசைந்து வந்து மாதங்கி உட்கார்ந்தாள்.

மாப்பிள்ளை வீட்டிலிருந்து ஒரு வயசான சுமங்கலி அம்மாள் எழுந்து சடங்கை ஆரம்பித்து வைத்தாள்.

சந்தனத்தை மாதங்கியின் கழுத்து, கன்னம் மீது பூசி, பொட்டு வைத்துப் பூச்சூட்டி, ஆரத்தி எடுத்துத் திருஷ்டி கழித்தாள். பின் பல பெண்கள் தொடர்ந்தனர்.

முருகா! இப்படி ஒரு அதிசயமா? எனக்குப் பிடித்தவரையே எனக்குக் கொடுத்து... இன்பச் சிலிர்ப்புடன் மெல்ல நிமிர்ந்து ஹர்ஷன் பக்கம் பார்த்தாள் மாதங்கி.

நெருப்பாக ஏன் அவளை அவன் வெறிக்கிறான்? அப்படியென்றால் அவனுக்கு அவளைப் பிடிக்கவில்லையா?

சட்டெனத் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள் மாதங்கி. கண் இமைகளினின்று இரண்டு சொட்டுக் கண்ணீர் கைகள் மீது உதிர்ந்தன.

(தொடரும்)

# உடற் குறையுடன் பிறப்பதைத் தடுக்க...

டாக்டர் டி. என். ராமமூர்த்தியுடன் பேட்டி

● நூறு குழந்தைகளில் ஆறேழு பேர் பிறப்பிலேயும், இன்னொரு ஆறு அல்லது ஏழு சதவீதம் பிறந்த சில மாதங்களிலேயும் உடல் ஊனம் அடைவதாகச் சொல்லப்படுகிறதே. இதற்கு ஏதேனும் தடுப்பு முறை ஆலோசனைகள் கூற முடியுமா, டாக்டர்?

கருவுற்ற பெண் முதல் மூன்று மாதங்கள் சற்று ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஜெர்மன் மீஸல்ஸ் முதலிய நோய்கள் இந்தச் சமயத்தில் வராது காத்துக் கொள்ள வேண்டும். ஏனென்றால் இந்த முதல் மூன்று மாதத்தில்தான் குழந்தையின் முக்கிய உறுப்புக்கள் உருவாகின்றன. சில ஹார்மோன் மருந்துகளைக் கருவுற்ற பெண் சாப்பிடுவதும் உடல் குறைகளுடன் குழந்தைகள் பிறக்கக் காரணமாகும். தாய்க்கு இரத்த வகை Rh நெகடிவ் ஆகவும், தகப்பனாரின் இரத்த வகை Rh பாஸிடிவ் ஆகவும் இருந்தால், பிறக்கும் குழந்தைகளுக்குச் சில நாட்களிலேயே மஞ்சள் காமாலை வந்து மூளையைப் பாதித்து, மன வளர்ச்சி குன்றிய குழந்தையாகி விடும். உடனடியாக இதைக் கண்டு பிடித்துக் கவனமாகச் சிகிச்சை அளிக்க வேண்டும்.

● திருமணத்துக்கு முன் ஏதேனும் ஆலோசனை பெற வேண்டுமா?

முதலாவதாக, கணவன் — மனைவியாகப் போகிறவர் இருவருமே தங்களின் நெருங்கிய உறவினர் எவருக்கேனும் பரம்பரையாகவே உடற் குறை இருந்தால் மருத்துவரை அணுகி, திருமணத்துக்கு முன்போ, கருவுறுவதற்கு முன்போ தகுந்த ஆலோசனை பெறுவது நல்லது. இரண்டாவதாக, ஒரு பெண்ணுக்குத் தாயாக ஏற்ற வயது 20 முதல் 35 வயதுக்குள்தான். 18 வயதுக்கு முன்பும் 40க்குப் பிறகும் பிள்ளை பெறுவது நல்லதல்ல. அது போலவே ஆண் 45 வயதுக்குள் தகப்பனாவது நல்லது. ஒரு குழந்தைக்கும் அடுத்த குழந்தைக்கும் இடையே இரண்டு வருட இடைவெளியாவது இருத்தல் அவசியம். மூன்றாவது குழந்தைக்குப் பிறகு, உடற் குறையுடனோ, இறந்து போன சிசுவாகவோ பிரசவமாக ஏதுவுண்டு. தொற்று நோய் ஏதும் வராமல் கருவுற்றிருக்கும் வேளையில் பாதுகாப்பாக இருக்க வேண்டும். கருவுற்றிருக்கும் பெண் தனக்கு மருத்துவ ஆலோசனை வழங்கும் டாக்டர் குறிப்பிடும் அத்தியாவசியமான மருந்துகள் தவிர வேறு எந்த மருந்தும் உட்கொள்ளக் கூடாது. புரதமும் வைட்டமின்களும் நிறைந்த சத்தான உணவைச் சாப்பிட வேண்டும். கருவுற்ற ஒவ்வொரு பெண்ணும் தன் இரத்த குரூப்பைத் தெரிந்து கொள்ள வேண்டும். Rh நெகடிவ் ஆனால் வயிற்றில் வளரும் குழந்தைக்கும் இனி பிறக்கவிருக்கும் குழந்தைகளுக்கும் Rh நோய்கள் வராது பாதுகாக்கத் தகுந்த முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டும்.

✖ டாக்டர். டி. என். ராமமூர்த்தி, எம்.டி.



● கருவிலிருக்கும் குழந்தை ஆணா பெண்ணா என்று அறிந்து கொள்ள இப்போது வசதி இருப்பது போல, பிறக்கும் குழந்தைக்கு ஊனம் ஏதேனும் இருக்குமா என்று தெரிந்து கொள்ள முடியுமா, டாக்டர்?

நிச்சயம் தெரிந்து கொள்ளலாம். புது தில்லி ஏ.ஐ.ஐ.எம்.எஸ்.ஸில் செய்வதுபோல் இங்கேயும் அந்தப் பரிசோதனைகளைத் தாராளமாகச் செய்யலாம். கருவுற்ற பெண்ணின் வயிற்றின் வழியாக (லோகல் அனஸ்தீஸியா கொடுத்துவிட்டு) யூடரஸில் ஓர் ஊசியைச் செலுத்தி நீரை எடுத்து லேபரட்டரியில் பரிசோதனை செய்து கண்டுபிடிக்கலாம். கருவுற்ற 13 அல்லது 14ஆவது வாரத்தில் இதைச் செய்யலாம். இதில், பிறக்கப்போகும் குழந்தை ஊனமுள்ளதாகத் தெரிந்துவிட்டால், பெற்றோர் விரும்பினால், கருவைக் கலைத்துவிடலாம். அது நல்லதல்லவா?

● பிறவியில் ஊனமான குழந்தைக்கு வைத்தியம் எப்படி?

அது ஊனத்தையும் அதன் தீவிரமான பாதிப்பையும் பொறுத்தது. சிறிய குறையானால் சாதாரண அறுவைச் சிகிச்சையில் சரியாக்கி விடலாம். கைகால் ஊனமோ, மூளை பழுதுபட்டோ போயிருந்தால் குழந்தை மருத்துவர், நரம்பியல் மருத்துவர், கண்-காது மருத்துவர், ஃபிஸியோ தெர

பிஸ்ட், ஸ்பீச் தெரபிஸ்ட் ஆகிய பல நிபுணர்களின் கூட்டு முயற்சி தேவைப்படும்.

● குழந்தைகளுக்கு போலியோ நோய் வராமல் தடுக்க எவ்வெப்போது போலியோ டிராப்ஸ் கொடுக்க வேண்டும்?

பிறந்த இரண்டாம் மாதத்திலிருந்து, மாதம் ஒரு டோஸ் வீதம், மூன்றிலிருந்து ஐந்து டோஸ் வரை கொடுக்க வேண்டும். பிறகு 18 மாதத்துக்கு அப்புறம் ஒரு டோஸும், ஐந்து வயதுக்குப் பிறகு ஒரு டோஸும் கொடுக்க வேண்டும்.

● ஊனம் ஏற்படுத்தும் பிற நோய்கள் பற்றி....?

பெரிய அம்மை நோயினால் பலர் கண் பார்வை இழந்து வந்தனர். இந்த நோய்த் தடுப்புக்குக் கண்டிப்பாக அம்மை குத்திக் கொள்ள வேண்டும். தொழு நோயினால் ஊனமடைவோரும் ஏராளம். தொழு நோயைத் தொடக்க காலத்திலேயே சிகிச்சை அளித்தால் முற்றிலும் குணப்படுத்திவிடலாம். உடலில் ஏதேனும் ஒரு பாகத்தில் உணர்ச்சி மரத்துப் போவது போல் தோன்றினால் உடன் டாக்டரை அணுக வேண்டும்.

● இவை தடுப்பு முறைகள், ஊனமான குழந்தைகளுக்குச்சிகிச்சைக்கு என்ன வழி?

எத்தனையோ சிறந்த எலும்புச் சிகிச்சை நிபுணர்களும், ஆந்திர மகிளா சபா நடத்தும் ஆர்த்தோபீடிக் சென்டரும் இது போன்ற பிற ஸ்தாபனங்களும் அரசினரின் ஆர்ட்டிஃபீஷியல் லிம்ப் சென்டரும் இந்தப் பணியில் தங்கள் கடமையை வெகு அற்புதமாகச் செய்து வருகின்றனர்.

● கடைசியாக ஒரு கேள்வி. சாலையிலும், தொழிற்சாலைகளிலும் ஏற்படும் விபத்துக்களினால் உடல் ஊனமுறுவதைத் தடுக்க...?

(சிரித்தபடி) இது என் சம்பந்தப்பட்ட கேள்வி அல்லவே! இருந்தாலும், சாலைகளிலும் தொழிற்சாலைகளிலும் குறிப்பிடப்படும் பாதுகாப்பு விதிகளை அனுசரித்து நடந்தால், கூடுமான வரை இவற்றைத் தவிர்க்கலாம். முக்கியமாக, தொழிற்சாலைகளில் முகத்துக்கும் கண்களுக்கும் தடுப்பு, ஹெல்மெட், கையுறைகள்-இவை அணிவதால் சில விபத்துக்கள் நிச்சயம் தடுக்கப்படலாம்.

● நன்றி டாக்டர்.

பேட்டி : எஸ். விஸ்வநாதன்

---

# காது கேளாதவரைக் கேலி செய்கிறேனா? இல்லவே இல்லை!

'விசு'

நாடகாசிரியர் விசு தமது சமீபத்திய படைப்பான ''மோடி மஸ்தா'' வில் காது கேளாத ஒரு பாத்திரத்தை உருவாக்கியுள்ளார். மற்ற நாடக பாத்திரங்கள் அவரிடம் எதையாவது கூறுவதும் அவர் சம்பந்தமில்லாமல் வேறு ஏதோ பேசுவதும் ரசிகர்களிடம் சிரிப்பை ஏற்படுத்துகின்றன. ''ஒரு அங்கஹீனத்தைப் பயன்படுத்தி ஜோக் அடிப்பது மட்டமானதாக உங்களுக்குத் தோன்றவில்லையா? காது கேளாதவர்கள் மனது இதனால் புண்படும் என்று உங்களுக்குத் தோன்றவில்லையா?'' என்று கேட்டபோது விசு தம் கருத்தை விவரித்தார்:

''மோடி மஸ்தான் கதையில் அடிப்படைக் கருத்து என்ன என்று பார்க்க வேண்டும். திருமணச் சந்தையில் பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ள ஏகப்பட்ட கண்டிஷன்கள் போடப்படுகிற நிலையைக் கண்டிப்பதே நோக்கம். இதை நகைச்சுவையாகச் செய்யத் தீர்மானித்தேன். இந்த அடிப்படையை ஏற்பதா யிருந்தால் பிறகு அந்தச் செவிடு காரெக்டரையும் நீங்கள் ஏற்பதில் சிரமம் இராது. எனது கதாநாயகனை ஏமாற்ற, கதாநாயகியின் தந்தை சாதாரண மனிதனாக இருந்தால் சம்மதித்து இருக்க மாட்டார். அவர் இறந்துவிட்டதாகக் காட்டியிருந்தால் கதை சீரியஸ் பாதையில் சென்றிருக்கும். அவரது மனைவி மேல் எனக்குத் தேவையில்லாத அனுதாபம் விழுந்திருக்கும். ஆகவே இருந்தும் இல்லாத தந்தையை உருவாக்க அவரைக் காது கேளாதவர் ஆக்கினேன்.

''அவரை வைத்துக் காமெடி செய்தேன். அவரைப் பழித்தோ, கேலி செய்தோ அல்ல.

''தனது மூத்த மகன் தனது விருப்பத்துக்கு எதிராக ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டதற்காக குடும்பப் பிரஷ்டம் செய்யும் அந்தப் பெரியவர் அதே மகனை நினைத்துப் பெண்ணின் கல்யாணத்தில் உக்கிராண அறையில் விளக்கை அணைத்துத் தனியாக அமர்ந்து அழுகிறாரே! நெஞ்சில் கை வைத்துச் சொல்லுங்கள், அவரைக் கேலியா செய்திருக்கிறேன்?

''இப்படி அந்தக் கதாபாத்திரத்தின் உயர்வைச் சுட்டிக் காட்ட நான் எவ்வளவோ சம்பவங்களை அடுக்கிக் கொண்டே போகலாம். எனது காது கேட்காத அந்தப் பாத்திரம் ஊனமுற்றோர் நலன் ஆண்டில் நாம் காணும் ஓர் உன்னதமான மனிதன்.'' பேட்டி: ''சிக்கி''

# மேனியழகு மிளிர இயற்கை உங்களுக்குத் தரும் சீதனம்







ஓர் அரசு
நிறுவனத்தின்
தரமிகு
தயாரிப்பு

## வேப்

வேப் சோப்பு, உங்கள் சருமம் உலர்ந்து கருங்கிவிடாமல் பாதுகாத்து, மழ மழப் பாக இருக்க உதவுகிறது.

கொழிக்கும் நுரை, நீடிக்கும் நறுமணம். உங்கள் மேனியின் இளமையையும் அழகையும் பேணிக் காக்கிறது வேப்.

**கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ் லிமிடெட்**
**கோழிக்கோடு.**

## வேப்

**மேனிக்கு மெருகூட்டும்**
**இயற்கையின் கைவண்ணம்**

FDS KSO 3383A TAM

# ❀ வனவாசம் ❀ கண்ணதாசன் ❀

## 12. ரோஜாவின் ராஜா

நேருவிடத்தில் அவன் வைத்திருந்த மரியாதை அளவற்றதாகும். தி. மு. க.வில் இருந்தபோது மூடனாகவும், முரடனாகவும் நின்றுகொண்டு நேருவைக் கேலி செய்த அவன், ஞானக் கண் திறந்த பிறகு அவரது எல்லையற்ற பெருமைகளை உணர்ந்தான்.

உலக வரலாற்றில் நேருவைப் போலக் குறைபாடில்லாத மனிதர்கள் மிகவும்குறைவு. அந்தச் சரித்திர நாயகனையும் அவனது காலடி தொடரும் காமராஜரையும் எண்ணியபோது காங்கிரஸ் பேரியக்கத்தின் மீது அவனுக்கு மரியாதை ஏற்பட்டது.

ஆண்டி, பரதேசி, அன்னக்காவடிகளெல்லாம் அரசியலில் புகுந்து பதவியைக் கைப்பற்றிக் கோடிக் கணக்கில் சொத்துச் சேர்க்கும் இந்த நாட்டில், கோடி கொடுத்துக் குடியிருந்த வீடும் கொடுத்தவன் ஜவாஹர்லால்.

அந்த ஜவாஹர்லாலை வைத்துக்கொள்ளும் யோக்கியதை இந்தியாவுக்கு இல்லை.

சில மகுடங்கள் சில தலைகளுக்குத்தான் அழகாக இருக்கும். இந்தியா அந்த ஜவாஹர்லாலை இழப்பதற்குத் தயாராகிக்கொண்டிருந்தது.

மலைவாசஸ்தலத்துக்குப் போன ஜவாஹர்லால் உடல் நலம் இல்லாமல் திரும்பினார் என்ற செய்தி மற்றவர்களுக்கு எப்படி இருந்ததோ, அவனுக்குப் பேரிடியாக இருந்தது.

இந்தியா தனது ஒருமைப்பாட்டையும், ஒற்றுமையையும் இழந்துவிடுமானால், துண்டு துண்டாகச் சிதறிவிடும். ஒவ்வொரு துண்டும் ராணுவத்தின் கைக்குப் போகுமே தவிர, ஜனநாயகப் பிரகாசத்தில் மகுடம் சூட்டிக் கொள்ளாது.

முன்பு அவன் எவ்வளவுக்கெவ்வளவுபிரிவினைக் கொள்கையைப் பிரசாரம் செய்தானோ அவ்வளவுக்கவ்வளவு அதன் விரோதியாக இருந்தான், இப்போது.

நேருவுக்காக அவன் பிரார்த்தித்தான்.

இந்த நேரத்தில் அவனது படங்கள் ஒன்றின் பின் ஒன்ருக வெளியாயின.

வானம்பாடி, சுமைதாங்கி, இரத்தத் திலகம். இரண்டில் அவனது பொருளாதார இழப்புக்கள் சரிக்கட்டப்பட்டன. ஆனல் வியாபாரரீதியில் செய்த தவறு காரணமாக இரத்தத் திலகத்தில் மூன்றரை லட்சரூபாய் கடனாகி விட்டது.

இதில் கம்பெனியில் இருந்த திருடர்கள் திருடிக் கொண்டது ஒருலட்ச ரூபாய் இருக்கும்.

எதைப் பற்றியும் கவலைப்படாமல் அவன் அடுத்த வேலையைக் கவனித்தான். அடுத்த படத்துக்குப் புதுக் கதை தேடினன்.

படங்களை ஆரம்பித்துப் பாதியில் நிறுத்துவது அவன் வழக்கம். ஒரு கதையும் அமையாமல் தடுமாறிக் கொண்டிருந்தபோது அவனது பொழுது வீண் பொழுதாகவே போய்க் கொண்டிருந்தது.

இந்த நேரத்தில்தான் தனது சுயசரிதத்தை 'வனவாசம்' என்ற பெயரில் எழுதி முடித்தான்.

'காலமும் அலையும் காத்திருப்பதில்லை' என்பார்கள். உணர்ச்சிப் பிரவாகத்தில் நீச்சலிட்ட இந்தக் காலங்களில் அவன் அற்புதமான சில காவியங்களை எழுதியிருக்க முடியும். ஆனல் எழுத்திலும் தேருமல், பணத்தையும் இழந்து சகதியில் மிதந்தான், அவன்.

இப்போது நினைத்தால் இழந்துபோன அந்தக் காலங்களுக்காகக் கண்ணீர் விட வேண்டியிருக்கும். ஆதரித்து, அரவணைத்து அன்பு காட்ட யாருமில்லை.

அவமானகரமான பாதைகளைத் தேர்ந்தெடுத்துவிட்டதால் அமைதியும் இல்லை.

✕ கடல் சூழ் உலகைப் படை சூழாமற் காத்த நேரு கென்னடியுடன். பின்னால் ஜான்ஸன்.



தேசிய ஆர்வத்திலும் சினிமாப் பாடலி லும்தான் மன நிம்மதி அடைந்து வந்தான்.

சில காலத்துக்குப் பிறகு பண்டித நேருவின் உடல்நிலையைப் பற்றிய செய்திகள் கவலைக் குரியவையாக வந்து கொண்டிருந்தன.

மலையிலிருந்து அவர் டெல்லி திரும்பினார். நிருபர்கள் அவரைச் சந்தித்து ''உங்களுக்குப் பின்னால் யார்?'' என்று கேட்டார்கள். அந்தக் கேள்விக்கு அவர் நேரடியாகப் பதில் சொல் லாமல், ''ஏன் கவலைப்படுகிறீர்கள்; நான் இன்னும் நீண்ட காலம் இருப்பேன்'' என்றார்.

அப்படிக் கூறிய நாற்பத்தி எட்டு மணி நேரத்தில் அந்தத் துயரம் நிகழ்ந்தே விட்டது.

மதியம் அவன் உணவருந்திக் கொண் டிருந்தபோது அவனது உதவியாளர் தமிழ்ப் பித்தன் அந்தத் துயரச்செய்தியைக் கொண்டு வந்தார். அவன் பயந்து கொண்டிருந்த அந்த நிகழ்ச்சி நடந்தே விட்டது. கால தேவன் நேருவை அழைத்துக் கொண்டு விட்டான். உலகம் முழுவதும் ஒரு கேள்விக் குறி விழுந்தது.

காங்கிரசுக்குள்ளும் வெளியிலும், அர சியல் வாப வேட்டைக்காரர்கள் சுறுசுறுப் படைந்தார்கள். கள்ளம் கபடம் இல்லாத அவனோ கண்ணீர் வெள்ளத்தில் மிதந்தான். கொடியதோர் துயரத்தை நோக்கி இந்தியா நடை போடப் போவதாகவே அவனுக்குத் தோன்றிற்று.

உஸ்மான் ரோடு 39ம் எண்ணில் உள்ள கட்டிடம் அவனது அலுவலகம். அதற்குப் பின்னால் ஒரு கொட்டகை. அதற்குள் உட் கார்ந்து கவிதைகள் எழுத ஆரம்பித்தான்.

சீரிய நெற்றி எங்கே
சிவந்தநல் இதழ்கள் எங்கே
கூரிய விழிகள் எங்கே
குறுநகை போனதெங்கே
நேரிய பார்வை எங்கே
நிமிர்ந்தநன் நடைதா னெங்கே?
நிலமெலாம் வணங்கும் தோற்றம்
நெருப்பினில் வீழ்ந்த திங்கே!

அம்மம்மா என்ன சொல்வேன்
அண்ணலைத் தீயிலிட்டார்
அன்னையைத் தீயிலிட்டார்
பிள்ளையைத் தீயிலிட்டார்
தீயவை நீனையா நெஞ்சைத்
தீயிலே எரியவிட்டார்

''ஒரு தொழிலதிபரை விடச் சுலபமாக ஒரு சுவாமிஜி அல்லது ஜோசியர் ஒரு மந்திரியை இன்று சந்தித்து விட முடியும்!''
('பிஸினஸ் இந்தியா' இதழில் இராகுல் சிங் கூறி யது) -அனிதா ராமச்சந்திரன்



தீயசொல் சொல்லா வாயைத்
தீயிலே கருகவிட்டார்

வேறு

பச்சைக் குழந்தை
பாலுக்குத் தவித்திருக்க
பெற்றவளை அந்தப்
பெருமான் அழைத்துவிட்டான்
வானத்தில் வல்லூறு
வட்டமிடும் வேளையிலே
சேய்க்கிளியைக் கலங்கவிட்டுத்
தாய்க்கிளியைக் கொன்றுவிட்டான்.

சாவே உனக்கொருநாள்
சாவு வந்து சேராதோ!
சஞ்சலமே நீயுமொரு
சஞ்சலத்தைக் காணாயோ!
தீயே உனக்கொருநாள்
தீமூட்டிப் பாரோமோ!
தெய்வமே உன்னையும்நாம்
தேம்பிஅழ வையோமோ!

யாரிடத்துப் போயுரைப்போம்!
யார்மொழியில் அமைதி
கொள்வோம்?
யார்துணையில் வாழ்ந்திருப்போம்?
யார்நிழலில் குடியிருப்போம்?

வேரோடு மரம்பறித்த
வேதனை எம்மையும்நீ
ஊரோடு கொண்டுசென்றால்
உயிர்வாதை எமக்கில்லையே...
நீரோடும் கண்களுக்கு
நிம்மதியை யார்தருவார்?
நேருஇல்லா பாரதத்தை
நினைவில்யார் வைத்திருப்பார்?

ஐயையோ! காலமே!
ஆண்டவனே! எங்கள்துயர்
ஆறாதே ஆறாதே
அழுதாலும் தீராதே!

கைகொடுத்த நாயகனைக்
கைப்புறத்தே மறைத்தாயே
கண்கொடுத்த காவலனைக்
கண்மூட வைத்தாயே
கண்டதெல்லாம் உண்மையா
கேட்டதெல்லாம் நிஜம்தானா
கனவா கதையா
கற்பனையா அம்மம்மா....

நேருவா மறைந்தார்? இல்லை!
நேர்மைக்குச் சாவே இல்லை!
அழிவில்லை முடிவுமில்லை
அன்புக்கு மரணம் இல்லை!

இருக்கின்றார் நேரு
இங்கேதான் இங்கேதான்
எம்முயிரில் ரத்தத்தில்
இதயத்தில், நரம்புகளில்,
கண்ணில், செவியில்,
கைத்தலத்தில் இருக்கின்றார்
எங்கள் தலைவர்
எமைவிட்டுச் செல்வதில்லை

என்றும் அவர் பெயரை
எம்முடனே வைத்திருப்போம்
அம்மா....அம்மா....அம்மா....

ரோஜாமலரே ஏன் மலர்ந்தாய் — எங்கள்
ராஜா இல்லையே மார்பினில் சூட
எங்கள் வானம் இருண்ட பின்னாலே
எங்கள் வெண்ணிலா மறைந்த பின்னாலே
—ரோஜா

பூப்போல் இருப்பான் புன்னகை புரிவான்
பார்ப்பவர் நெஞ்சில் படம்போல் பதிவான்
காட்சியில் எளியன் கருத்தினில் இனியன்
ஆட்சியில் மன்னன் அடங்கிய பின்னே
—ரோஜா

இனிமேல் உலகில் ஏழைகள் நாங்கள்
இறக்கை இல்லாத பறவைகள் நாங்கள்
அன்னை இல்லாத பிள்ளைகள் நாங்கள்
அரசன் இல்லாத குடிமக்கள் நாங்கள்
—ரோஜா

குழந்தைகளே ஏன் சோர்ந்துவிட்டீர்கள்
குழந்தை நேருவைப் பிரிந்ததனாலா?
மணிவாய் திறந்து மாமா என்று
மறுபடி அழைக்க அவர் வருவாரா?
—ரோஜா

அடிமைக்கு இனிமேல் விடுதலை இல்லை
அழுகைக்கு இனிமேல் ஆறுதல் இல்லை
கொடுமைக்கு இனிமேல் முடிவுகள் இல்லை
கொற்றவன் ஜவஹர் குரல்இனி இல்லை
—ரோஜா

இந்தப் பாடல்களை சீர்காழி கோவிந்தராஜன், திருமதி கஸிலா, எம். எஸ். விஸ்வநாதன் ஆகியோர் கடற்கரையில் பாடினார்கள்.

டெல்லியில் நேருவின் உடல் தகனமாகும் அதே நேரத்தில் சென்னையில் ஒரு மௌன ஊர்வலமும், கடற்கரையில் இந்த இரங்கல் நிகழ்ச்சியும் நடைபெற்றன.

சுமார் ஐந்து லட்சம் மக்கள் கூடியிருந்தார்கள். 'அண்ணலைத் தீயிலிட்டார்' என்று கோவிந்தராஜன் பாடியபோது பெண்களின் பகுதியில் இருந்து விக்கலும், விம்மலும் கேட்டன. கக்கன் மாலை மாலையாகக் கண்ணீர் சிந்திக் கொண்டிருந்தார்.

அதற்கு முன்னால் மரணம் பற்றிய செய்தி வந்தவுடனேயே அவன் தலைவர் காமராஜரைத் திருமலைப் பிள்ளை ரோட்டில் போய்ப் பார்த்து வந்திருந்தான். அவரது கண்களும் சிவந்து கண்ணீரால் நிரப்பப்பெற்றிருந்தன. விமானத்துக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்த அவர், ''என்ன செய்வது பார்க்கலாம்...'' என்றார்.

நேருவின் சடலம் எரிக்கப்பட்ட அன்று, அவனது உள்ளத்தில் கவிதை வெள்ளமே பொங்கி வழிந்தது.

எழுதினான், எழுதினான், எழுதிக்கொண்டே இருந்தான்.

பண்டித ஜவகர் என்னும்
பண்புசால் வெண் புறாவே
மண்டலம் காவல் கொண்ட
மன்னனே உன்னையோர்நாள்
கண்டது முதலே நின்பாற்
கலந்தவன் எழுதுகின்றேன்




உன்னிடம் உயிரை வைத்தே
உனக்கிதை எழுது கின்றேன்.

. . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .

கங்கைத் தனிநதியே — உனக்கோர்
கருணை வாய்த்ததடி
பொங்கும் கடலலையே — உனக்கோர்
புகழும் வாய்த்ததடி

. . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .

மன்னவன் சாம்பலிலே — ஒருதுளி
என்னுடன் சேராதோ — அவன்
தன்மை படியாதோ — எனக்கோர்
தைரியம் தோன்றாதோ!

. . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .

தனியே எனக்கோர் இடம் வேண்டும் — தலை
சாயும் மட்டும் நான் அழவேண்டும்
வானகம் போய்வர வழிவேண்டும்—எங்கள்
மன்னனை நான் பார்த்து வரவேண்டும்

. . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .

பறக்கும் பறவைக் கூட்டங்களே — எங்கள்
பண்டித நேருவைக் காண்பீரோ — இங்கு
துடிக்கும் கோடி உள்ளங்களை — அந்தத்
தூயவனிடம் கொண்டு சேர்ப்பீரோ
—அம்மா—தனியே—

. . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .

தலைநகர் தெருவில் எங்கள்
தலைவன்நீ செல்லும்போது
தலையசைப்பாரைக் கண்டு
கையசைப்பாயே! இன்று
அலையெனத் திரண்ட கூட்டம்
அசைத்ததே கையை! ஐயா!
தலையை ஏன் மறைத்துக்கொண்டாய்
தவறென்ன செய்தோம் நாங்கள்!

. . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .

உலகம் கூடி ஒருகுரல் கூட்டி
அழுத கண்ணீரே ஆற்றுப் பெருக்கம்
கடல்சூழ் உலகைப் படைசூழாமற்
காத்தவனுதலின் கடலும் அழுதது!

. . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . .

என்றோ ஓர்நாள் இன்னொரு நேரு
பிறப்பான்! அதுநம் பிள்ளைகள் நாளில்
நடந்தால் இறைக்கு நன்றியைச் சொல்வோம்
அழுத கண்ணீர் ஆறுமுன்னாலே
எழுத வார்த்தை இதற்குமே இல்லை!

(வளரும்)

# அமுதசுரபி

## பிப்ரவரி 1981 இதழுடன்...

இலவச இணைப்பு.

- சிறுகதைகள்.
- திரைப்பட விமர்சனம்
- வாசகர்கள் பரிசு பெற பல பகுதிகள்.
- மாதபலன் • துணுக்குகள்
- முழுவதும் ஆப்செட் அமைப்பு
- விலை ரூ. 1.50.
- ஆண்டு சந்தா ரூ. 18.
- இரண்டாண்டுகள் ரூ. 30 (ரூ. 6 சலுகை)

- புஷ்பா தங்கதுரை

எழுதும் த்ரில் தொடர்கதை

**ரெண்டும் மூணும் மஞ்சு**

- சித்திரத் தொடர்

அபர்ணா நாயுடு எழுதும்

**இன்னும் கொஞ்சம் நேரம்**

'ஜெ'... சித்திரங்களுடன்.




**அமுதசுரபி,**
ஸ்ரீராம் டிரஸ்ட்,
123, அங்கப்பன் தெரு,
சென்னை 600 001.
போன்: 37890 • 28545




ADWAVE/AS/1552



# ஒப்பிலி

எம். எஸ். பெருமாள்

**கா**வேரி ஏமாற்றினாலும் இந்த வருடம் கலைஞர்கள் ஏமாற்றவில்லை. போன வருடத்துக்கு இந்த வருடம் முந்நூற்றி அறுபத்தைந்து நாட்களின் அனுபவ முதிர்ச்சியோடு ஆத்மார்த்தமாகப் பாடி ஆராதனை செலுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

இடம்: திருவையாறு.

வைபவம்: தியாகராஜ ஆராதனை.

மாஸ்டர் ரவிகிரணின் கைவண்ணத்தில் கோட்டு வாத்தியம் குழலின் நாதமாக மாறியிருக்கிறது. ரஞ்சனி ராகக் கீர்த்தனை செவிகளுக்குள்ளே ரீங்காரம் செய்துகொண்டிருக்க, வயதை மீறிய ஞானத்தை மனம் பாராட்டி ரசித்துக் கொண்டிருக்க, சந்நிதியை ஒட்டிய தெருவில் மனித வெள்ளத்தில் நானும் ஒரு துளியாய் மிதந்து வருகிறேன்.

பாரதி சிற்றுண்டிச் சாலை—

தனி ஒருவனுக்கு உணவில்லையெனில் ஜெகத்தையே அழிக்க முழக்கமிட்ட பாரதியின் பெயரில் ஒரு சிற்றுண்டி சாலை. சுந்தரத் தெலுங்கு அலைவீசிக் கொண்டிருக்கும் சூழ்நிலையில் சுயமான தமிழில் பாரதி சிந்தனைகள் அட்டைகளில் பளிச்சிட்டுக் கொண்டிருக்கின்றன.

தேனீயின் சுறுசுறுப்போடு உபசரிக்கும் இளைஞர் பட்டாளம். வியாபாரம் — வருமானம் — லாபம் என்ற கணக்கில் கட்டுப்பட்டு வராத, ஆனால் சேவை என்ற மிகப் பெரிய உன்னதத்தில் கட்டுண்டு நிற்கிற சிற்றுண்டி சாலை.

''இட்லி இன்னும் பத்து நிமிஷத்திலே ரெடியாயிடும். அதுக்குள்ள சூடா உப்புமா சாப்பிடுங்க சார்...''

—வியாபாரம்தான். அதற்குள்ளே பொதிந்திருக்கிற விநயத்துக்கு என்ன விலை வேண்டுமானாலும் கொடுக்கலாமே!

நான் இடம் தேடி நிற்பதைப் பார்த்துவிட்டுக் கல்லாவிலிருந்த இளைஞன் வில்சன் எழுந்து வருகிறான். பாரதி இயக்கம் அமைப்பாளர்களில் அவனும் ஒருவன்.

''இப்படி உட்காருங்க சார்...'' என்று எனக்கு இடத்தைக் காட்டி உட்கார வைத்துவிட்டு, உள்ளே திரும்பி, ''கண்ணா, சாரைச் சீக்கிரம் கவனி... மூணாம் நம்பர் டேபிள்'' என்று உத்தரவிடுகிறான்.

கண்ணன் — பதவிசான தோற்றம். பார்வைக்கு இளைஞன். பாரதியின் கண்ணன் என்று ஒப்பிட்டுச் சொன்னாலும் தப்பேதும் இல்லை என ஒரு கணம் யோசிப்பதற்குள்—

''ஒப்பிலி'' என்ற அதிகாரக் குரல் எழுகிறது.

கண்ணன் திரும்புகிறான்.

''இட்லி ரெடியாச்சா இல்லையாப்பா ?'' என்ற அதட்டல். நிமிர்ந்து பார்க்கிறேன்.

எதிர் மேஜையில் நாலைந்து இளைஞர்கள். தஞ்சையின் செழிப்பும் சென்னையின் நாகரிகமும் சேர்ந்திணைந்த இளவட்டங்கள். ஒரு கை நெல்லை வயலிலே வீசிவிட்டு ஊஞ்சலிலே கால் ஆட்டிக் கொண்டிருந்துவிட்டு விளைச்சலைப் பவுனாகவும் பணமாகவும் அள்ளிக் குவித்து வைத்த மூத்த சுகவாசிகளின் முறையான வாரிசுகளாக அவர்கள் இருக்க வேண்டும்.

''ஒப்பிலி... கேக்குறது காதுல விழலே?'' மீண்டும் அதட்டல்.

வில்சன் அவர்களைத் திரும்பிப் பார்த்துவிட்டு ''கண்ணா ஏழாம் நம்பர் டேபிள்ள என்ன வேணும் பாரு...'' என்று குரல் கொடுக்கிறார்.

என் முன்னே உப்புமாவை வைத்த கண்ணன் எதிர் டேபிளுக்கு ஓடுகிறான்.

''ஒப்பிலி — இட்லி''

''ஒப்பிலி — இட்லி''

கூச்சல் கவிதையாகி, கவிதையும் மெல்லிசையாகிறது.

''இட்லி ரெடியாய்டும் சார்... அதுக்கு முன்னே வேறே ஏதாச்சும் வேணுமா சார்..''

''ஓடாம நில்லு... நீதான் வேணும்.''

—நரமாமிசம் சாப்பிடற கூட்டமா என்ன? கண்ணன் நங்கூரம் போட்டதுபோல் அங்கேயே நிற்கிறான்.

''இட்டிலிக்கு சட்னியா கொத்சா?''

''ரெண்டுமே இருக்கு சார்.''

''பக்கவாத்தியங்கள்ளாம் ரெடி பாகவதர் தான் அம்பேல்... அப்படித்தானே...''

நண்பர்களுக்கு மத்தியில் வெடிச் சிரிப்பு. கண்ணனை நகர விடாமல் நிறுத்திவைத்து நையாண்டிச் சிரிப்பு. ஓர் இளைஞன் பட்டென்று தீக்குச்சியை உரசி சிகரெட் பற்ற வைத்துக் கொண்டு மற்றவர்களுக்கும் நீட்டுகிறான். ஒரு கணம் தயங்கிய பின் கண்ணன் தடுக்கிறான்.

''இங்கே ஸ்மோக் பண்ணக் கூடாது சார்.''



# துணுக்கு வேட்டை

இந்த இதழில் இடம்பெறும் துணுக்குகளைக் கல்கி வாசகர்களுக்காகத் தேர்ந்தெடுத்துத் தருபவர் ஓவியர் திரு.ஏ. விஸ்வம். துயரம் தோய்ந்த நிகழ்ச்சிகளை எழுத வண்ணச் சேர்க்கைகள் பயன்படாது என்ற கருத்தில் இவர் பயன்படுத்துவது பெரும்பாலும் கறுப்பு வெள்ளை நிறங்களைத்தான்.

"வெறும் மகிழ்ச்சியை ஊட்டுவனவாக மட்டும் அமையாமல் சமுதாயத்தை உலுக்கிப் பாதிப்பை ஏற்படுத்துகின்ற நிகழ்ச்சிகளையும் ஓவியத்தில் காட்டவேண்டும்" என்பது இவருடைய கொள்கை. இந்த அடிப்படையில் ஒரு பத்திரிகை ஆசிரியரின் மனைவி கற்பழிக்கப்பட்டு கொலை செய்யப்பட்டும் பரபரப்பை ஏற்படுத்திய நிகழ்ச்சியையும் நவீன பாணி ஓவியமாக வடித்திருக்கிறார். படத்தின் தலைப்பாக 'ரேப்' அண்ட் மர்டர்' என்று இவர் தந்துள்ள குறிப்பை இவர் மாற்ற மறுப்பதால் படம் கண்காட்சிகளில் இடம்பெற முடியவில்லையாம்!

திருச்சி மாவட்டம் கீழவன்னம் கிராமத்துக்காரரான திரு விஸ்வம் இப்போது புவனேஸ்வரில் உள்ள மத்திய அரசு நிறுவனமான வீவர்ஸ் சர்வீஸ் சென்டரில் ஆர்ட் டிசைனராகப் பணியாற்றுகிறார். காமராசன் கவிதைகளும், ஜெயகாந்தனின் கதைகளும் தமக்குப் பாதிப்பை ஏற்படுத்துவதாய்க் கூறும் இவர் அந்தக் கவிதை வரிகள், கதைக் குறிப்புகளையும் ஓவியத்திற்கு எடுத்துக் கொள்வதுண்டாம்.

அமைப்பு: வெஸ்பால் போட்டோ: பாபு

" 'புகை பிடிக்கக் கூடாது'ன்னு போர்டு போடலியே..." என்று ஒருவன் கூறியதும் இன்னொரு 'இடைச் செருகல்' "கண்ட கண்ட எழவெல்லாம் எழுதிப் போட நேரமிருக்கு... இதை எழுத மறந்து போச்சா?" என்று வெட்டுகிறான்.

"அது கண்ட கண்ட போர்டு இல்லே சார். பாரதி வாசகங்கள்."

"பாரதியா... சொன்னாத்தான் புரியுது. என்ன எழுதியிருக்கு... கொஞ்சம் படி பார்க்கலாம்..."

"நீங்களே படிக்கணும்னுதான் சார் நாங்க எழுதிப் போட்டிருக்கோம்."

'படிடா மடையா' என்று சொல்லாமல் மென்மையாகத் திருத்துகிற நா நயம்...

கல்லாவிலிருந்து குரல் – "கண்ணா ரெண்டாம் நம்பர் டேபிள்ள ஒரு ஃபேமிலி. என்ன சாப்பிடறாங்கன்னு கேளு..."

கண்ணன் நகருகிறான்.

பின்னர் திரும்பி, "சார் சிகரெட்டை அணைச்சிடுங்க..." என்று எச்சரிக்கிறான்.

"அட போட்டுட்டோம்பா..." என்று கூறிவிட்டுச் சிகரெட்டை உறிஞ்சி புகையைக் கண்ணனின் முகத்துக்கு நேரே ஊதுகிறார்கள்.

"கண்ணா..."

என் குரல் கேட்டுக் கண்ணன் திரும்புகிறான்.

"உன் பேர் கண்ணனா–ஒப்பிலியா?"

"கண்ணன்தான் சார்..."

"பின்னே உன் பிரண்ட்ஸ் ஒப்பிலின்னு கூப்பிடறாங்க...."

"அவங்க என் பிரண்ட்ஸ் இல்லே சார்... சாயந்திரம் டிபன் சாப்பிட வந்தாங்க... பொங்கல்ல உப்பு பத்தலேன்னு சண்டை போட்டாங்க... நீயே சாப்பிட்டுப் பாருன்னு விசிறி அடிச்சாங்க. நான் சாப்பிட்டுப் பார்த்தேன். 'என் நாக்குக்குச் சரியாத்தானே இருக்கு'ன்னு சொன்னேன். ஒருத்தர், 'அப்போ ஒனக்குச் சொரணையத்துப் போச்சுன்னு சொல்லு....''ன்னு சீண்டினார். 'ஒப்பிலியப்பனுக்கு உப்பில்லாமத்தான் நைவேத்தியம் பண்றோம். அதனால ஒப்பிலியப்பனுக்குச் சொரணை இல்லேன்னு அர்த்தமா'ன்னு திருப்பிக் கேட்டேன். அதுலேர்ந்து என்னை 'ஒப்பிலி', 'ஒப்பிலி'ன்னு கூப்பிட்டுக் கூச்சல் போடறாங்க..."

"ஒனக்குக் கோபம் வரலே?"

"சாமி பேர்தானே சொல்லிக் கூப்பிடறாங்க... கொடுத்து வச்சிருக்கணுமே..."

கண்ணனின் பணிவு... யதார்த்தப் போக்கு மனவளம் குறித்துப் பெருமைப்படுகிறேன்.

கண்ணன் சூடான இட்லிகளை இலையோடு என் முன் வைக்கிறான். கடச் கட கொத்சும், தேங்காய்ச் சட்னியும் எடுத்து ஊற்றுகிறான்.

குரலைத் தணித்துக் கொண்டு, "கண்ணா, சிகரெட் பிடிக்கக் கூடாதுன்னு நீ சொன்னேல்ல..." என்று நினைவூட்டுகிறேன்.

"அவங்க அப்பவே கீழே போட்டுட்டாங்க சார்."

"அடுத்த சிகரெட் பத்த வச்சிருக்காங்க. நீ அதைப் பார்க்கலே."

"என்னால பார்க்க முடியாது சார்."

"என்னப்பா சொல்றே..."

"எனக்குப் பார்வை கிடையாது சார்."

என் மனம் அதிர்ந்து அந்த உண்மையை நம்ப மறுக்கிறது.

"உனக்குக் கண் பார்வை கிடையாதா?"

"கிடையாது சார்... அப்போ கூட தீக்குச்சி உரசற சத்தத்தைக் கேட்டுத்தான் அவங்க ஸ்மோக் பண்ணப் போறதைத் தடுத்தேன்."

"கண்ணா... பின்னே எப்படி....."

"பரிமாற முடியுதுன்னு கேக்-றீங்களா? எல்லாம் பழக்கம்தான். மத்தவங்க ஆள் வந்திருக்கிறதைப் பார்த்து ஓடிவந்து சப்ளை பண்ணுவாங்க. எனக்கு மட்டும் டேபிள் நம்பரைச் சொல்லி அப்பப்ப வில்சன் குரல் கொடுப்பார். தட்டுத் தடுமாறும நாலு நாளா ஒரு டேபிளுக்கு ஒரு டேபிள் நடந்து பழகியிருக்கேன். அந்தப் பழக்கத்தை வச்சு... குரலைத் தடம் பிடிச்சு டேபிளுக்கு முன்னே வந்திடுவேன். ஆர்டரைக் கேட்டு உள்ளே போய்ச் சொல்லுவேன். அவங்க வாகா எடுத்துத் தருவாங்க. கொண்டுவந்து

சப்ளை பண்ணுவேன். பார்வை இல்லியேங்கறதுக்காக நான் யாருக்கும் பாரமா இருந்துடக் கூடாதேன்னு தவிச்சேன் சார். பாரதி இயக்கம் எனக்குப் பாதுகாப்பு தந்திருக்கு... எனக்கு வேலையும் கொடுத்து, சாப்பாடும் போட்டு, தினசரி பத்து ரூபா சம்பளமும் கணக்குப் பண்ணி சேவிங்க்ஸ்ல போட்டுட்டு வர்றாங்க....'

கண்ணன் புறப்படுவதற்குள் என் முன்னே குனிந்து ''எனக்குப் பார்வை இல்லேங்கிற விஷயம் அந்தப் பசங்களுக்குத் தெரிஞ்சிட வேண்டாம். அதுக்கும் சேர்த்துக் கலாட்டா பண்ணிறு என்னால தாங்கவே முடியாது சார்....'' என்று கெஞ்சுகிற குரலில் கூறி விட்டுப் போகிறான்.

''ஒப்பிலி—''

எதிர் வரிசை இளைஞர்களின் கோரஸ்.

என்ன கேட்டாலும் இலையை விசிறி முகத்தில் எறிய வேண்டும் என்று எனக்குள் ஒரு வேகம்.

''இட்லி வெந்துடுத்து... இதோ கொண்டு வரேன்''

''வேக வைக்க முடியாத இட்லி கொண்டு வந்து கொடேன். வச்சு வெளையாடிண்டிருக்கோம்.''

''வேக வைக்க முடியாத இட்லியா...'' கண்ணன் புரியாமல் கேட்கிறான்.

''ஆமா... காண்டீனை விட்டு வெளியே கூட்டத்துல ஒரு அலக அலக... கெடைக்கிறதைக் கொண்டு வந்து எங்களண்டை வுட்டுடு'' என்று ஒரு அரை வேக்காடு பேசி முடிப்பதற்குள்,

''ஷட் அப் ஐ ஸே!'' என்று கூச்சல் போடுகிறேன். இளைஞர்கள் ஆத்திரத்துடன் என்னை ஏறிட்டுப் பார்க்கிறார்கள்.

''பிஹேவ் யுவர்செல்ஃப் ப்ராப்பர்லி'' என்று மீண்டும் எச்சரிக்கிறேன்.

''மிஸ்டர்....'' என்று ஒருவன் கையை உயர்த்துகிறான்.

''பொது எடத்துல எப்படி நடந்துக்கணும்கிற நாகரிகம் ஒங்களுக்கெல்லாம் தெரியலியே... ஆண்டவன் உங்களுக்கெல்லாம் கண்ணைக் கொடுத்திட்டு மனசை இருட்டாக்கி வச்சிருக்கான்... நீங்கள்ளாம் படிச்சு என்ன பிரயோஜனம்... உங்களையெல்லாம் ஜென்டில்மென்னு நம்பி உத்தியோகம் வேறே குடுத்து வச்சிருக்காளே எத்தனையோ ஏமாளிகள்...''

நான் சாடி முடிப்பதற்குள், ''உத்தியோகமா... இவாளுக்கா? அப்படின்னு ஒண்ணு இருந்தா ஏன் இப்படிப் பொழுது போக்க வறதுகள்...'' என்று குரல் தட்டிக்கு அப்பாலிருந்து கேட்கிறது. சரக்கு மாஸ்டர் ரிங் மாஸ்டர் போல் வந்து நிற்கிறார். கையில் சாட்டைக்குப் பதில் ஜல்லிக் கரண்டி.

''யாராலும் இவாளைச் சாட மாட்டாளான்னுதான் நானும் காத்திண்டிருந்தேன். ஆராதனைக்கு வர்றசாக்குலே வந்தவா போனவா வயித்தெரிச்சலைக் கொட்டிக்கிறதே வழக்கமாப் போயிடுத்து.. வேலையத்த வெட்டிப் பசங்க... பூர்விகத்தைப் பங்கு போட்டுப் படிப்பு படிப்புன்னு பாதியை அழிச்சுப்பிட்டு பவுடர், ஸ்நோ, சிகரெட் சிநேகிதான்னு மிச்சம் மீதியை அழிக்கிற வெடலைப் பசங்க.... அவன் அவன் படிச்சு முடிச்சு ஆறு வருஷம் இருக்கும். வேலை தேடி அலையாம, கெடைச்ச வேலைக்குப் போகணும்னு மனசைப் பழக்காம கிருத்துருவம் பேசிக்கிண்டு கெட்டழிஞ்சு போறதுகள். இவா பேரெண்ட்ஸ்லாம் இந்த ஊர்ல பெரிய பெரிய புள்ளிகள். எல்லார் ஆத்திலேயும் நான் கிழமை விசேஷம்னு என்னைத்தான் கூப்பிடுவா... தோ மர வட்டை மீசை வச்சிருக்கானே ரமணி... இவன் அட்வகேட் கோபாலன் புள்ளை... அடுத்தவன்...''

சரக்கு மாஸ்டர் அறிமுகப் படலத்தைத் துவக்கியவுடன் சந்தடியில்லாமல் நழுவத் தொடங்குகிறார்கள் அந்த இளைஞர்கள்.

பில்லைக் கொடுத்துவிட்டுத் திரும்பிப் பார்க்கிறேன்.

கண்கள் கண்ணனைத் தேடுகின்றன.

''கண்ணு... மூணாவது டேபிள்ள ரெண்டு பேர் கவனி'' — வில்சனின் குரலுக்கு விரைந்து வருகிறான் கண்ணன்.

'ஒப்பிலி!'

அரை வேக்காடுகளானாலும் அறிந்தோ அறியாமலோ கண்ணனுக்குப் பொருத்தமான பெயரைத்தான் சூட்டியிருக்கிறார்கள்!

## வம்பன் வெங்கு

| | |
|---|---|
| செய்தி: செத்த பிணம் எழுந்து உட்கார்ந்தது. | வெங்கு: சர்க்கரை விலையைக் கூறினால் அது மறுபடியும் செத்திருக்குமே! |
| செய்தி: சட்டசபையில் பின்னி மில் பிரச்னை. | வெங்கு: பின்னிப் பின்னி எடுக்க எதிர்க் கட்சித் தலைவருக்கு 'துணி'வான வாய்ப்பு. |
| செய்தி: பகலில் திருடும் திருடர்களே அதிகம். | வெங்கு: பகலில் திருட வழி காட்டியவர்கள் அரசியல்வாதிகள்தான் என்று நான் ஏன் கூற வேண்டும்? |
| செய்தி: உற்பத்தியை அதிகரிக்க தனிப்பட்டவர்களின் தரிசு நிலங்களை அரசு ஏற்கலாம். | வெங்கு: ஏற்றபின்பு அவை 'அரசு' தரிசு நிலங்கள் என அழைக்கப்படும். |
| செய்தி: பல ஆந்திரமந்திரிகள் விலக்கப்படுவார்கள். | வெங்கு: பிறகு அஞ்சய்யா வெறும் பஞ்(சு)ஜய்யா! |



—விருச்சிகராஜ்

# கேளுங்கள்!

அறுத்தால்
நான்
விவசாயியா?



✖ டி. எல். ரெட்டி, வேலீந்பட்டி

கே. அதிர்ஷ்டத்தில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா?

ப: உண்டு. என் வெற்றிகள் உழைப்பின் காரணமாகவும் மற்றவர்கள் வெற்றிகள் அதிர்ஷ்டத்தின் காரணமாகவும் ஏற்பட்டன என்று எல்லாரையும் போல் நம்புகிறவன் நான்.

✖ டாக்டர் விரலட்சுமி நந்தகோபால், ஈரோடு

கே. அடுத்த ஊர்வசி சரிதாதான் என்கிறேன் சரிதானா?

ப: எனக்குத் தோன்றவில்லை. இப்போதுதானே ஒரு தென்னிந்திய நடிகை (ஷோபா)வுக்குக் கொடுத்தார்கள். மற்ற மாநிலங்களுக்குக் கொடுக்க வேண்டாமா? திறமை மட்டுமா பார்க்கிறார்கள், இத்தகைய விருதுகளில்? அப்படியே பார்த்தாலும் கியூவில் சுஜாதா முன்னே நிற்கிறார்.

✖ என். பானு, திருச்சி

கே. காந்தி வரலாற்றை நம்மவர்கள் தயாரிக்க இந்த 33 ஆண்டுகளாகத் தடை ஏதும் இருந்ததா?

ப: 'ஃப்ரீடம் அட் மிட் நைட்' என்ற சிறந்த புத்தகத்தை நமமவர்கள் எழுதத் தடை இருந்ததா? மேல் புல் மேய்பவர்களாகிய நாம் மகாத்மா காந்தியின் படத்தைக் காமா சோமா என்றுதான் எடுத்திருப்போம். அட்டன்பரோ சிறப்பாக எடுக்கிறாரோ இல்லையோ. நிச்சயமாக மிக அக்கறையாக ஆராய்ந்து எடுப்பார் என்று நம்பலாம்.

✖ முத்துவேலன், மாணிக்கவுண்டன்பாளையம்

கே. ஒரு சிந்தனை சிதறல் தரக்கூடாதா?

ப: கூடும். என் சொந்தச் சிந்தனைச் சிதறலைக் கொடுத்து உங்களைத் தொந்தரவு படுத்த விரும்பவில்லை. பல பிரபல நூல்களை எழுதிய அறிவாளியான வில் டுயரண்ட் ஓரிடத்தில் கூறியிருப்பதைத் தருகிறேன். நம் சிந்தனைக்கு உரிய வாசகம்: அறுபது வருடங்களுக்கு முன்பு எனக்கு எல்லா விஷயங்களும் தெரிந்திருந்தன. இப்போது எனக்கு ஒன்றும் தெரியாது. காரணம், நான் பல விஷயங்களைக் கற்கக் கற்க என்னுடைய அறியாமையைத்தான் மேன்மேலும் உணர்ந்தேன்.

✖ சாந்தலிங்கம், தாராபுரம்

கே. விவசாயி போராட்டத்தில் உங்களைக் கலந்து கொள்ளச் சொன்னால் போவீர்களா?

ப: நான் விவசாயியா என்ன? ஏதோ 'அறுக்கிறேன்' என்பதால் நான் விவசாயி ஆகிவிடமாட்டேன்.

✖ கோ. அரங்கநாதன், சூளை

கே. துன்பங்கள் ஏன் தொடர்ந்து வருகின்றன?

ப: இன்பங்களும் தொடர்ந்து வருவதுண்டு. ஆனால் அதை வெளியில் சொல்லிக் கொள்ள மாட்டோம். அல்லது கவனித்திருக்க மாட்டோம். துன்பங்கள் அதுவும் சில்லறைத் துன்பங்கள் ஒன்றிரண்டு வந்தால் ஓலமிடுவோம். இது மனித இயற்கை.

✖ எஸ். முல்லைமணாளன், சென்னை-24

கே. மனு நீதி சோழனின் மணி போல் அரசாங்க அலுவலகத்தில் ஒரு மணியைக் கட்டி வைத்தால் என்ன?

ப: தினமும் தேய்ந்துபோகும் மணிகளை மாற்றிக் கட்டுப்படியாகுமா சர்க்காருக்கு?

✖ எஸ். ராஜகணேஷ், தஞ்சாவூர்

கே. அடுத்த ஜென்மத்தில் அறிவாளியாகப் பிறக்க விரும்புகிறீர்களா, அதிர்ஷ்டசாலியாகப் பிறக்க விரும்புகிறீர்களா?

ப: அதிர்ஷ்டசாலியாகத்தான். சும்மா ஒரு மாறுதலுக்காக. ஒவ்வொரு ஜன்மத்திலும் அறிவாளியாக இருப்பது எனக்குப் போரடிக்கிறது!

✖ இரா சேகரன், மதுரை-1

கே. வீடு சுத்தமாக இருக்க வேண்டும் என்றால் குழந்தை இருக்கக் கூடாது என்று கமலஹாசன் கூறியது பற்றி....?

ப: எங்கு எப்போது சொன்னார் என்று எனக்குத் தெரியவில்லை. அது போகட்டும், இதே கருத்து பரமக்குடி சீனிவாசன் அவர்களுக்கும் இருந்திருந்தால் தமிழ்த் திரையுலகத்திற்கு ஒரு இன்டெலிஜன்ட் ஹீரோ கிடைத்திருக்க மாட்டாரே!

பரிசு பெறுபவர் · கோ. அரங்கநாதன், 107 அஷ்டபுஜம் ரோடு, சென்னை-7

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

# புத்தாண்டு மணக்க
# நரசுஸ்
# காபி அளிக்கும்
# வெகுமதிகள்!






- 12 கிலோ நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் காபி டபரா செட்.
- 6 கிலோ நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் காபி டம்ளர்.
- 2 கிலோ நரசுஸ் காபிக்கு வண்ணத் துணிப்பை.
- 750 கிராம் நரசுஸ் காபிக்கு பெரிய எவர்சில்வர் ஸ்பூன்.
- 500 கிராம் நரசுஸ் காபிக்கு சிறிய எவர்சில்வர் ஸ்பூன்.

மொத்தமாகவோ, சில்லரையாகவோ வாங்கும் நரசுஸ் காபியுடன் கிடைக்கும் வெகுமதிக் கூப்பன்களைப் பெற்று வெகுமதிகளைப் பெறுங்கள்.

22-12-80 முதல் 21-2-81 வரை முடியும் விற்பனைக்கே இப்பரிசுகள் உரியவை.

**ஜீவனுள்ள ஒரே காபி!**

## நரசுஸ்

**"தெர்மலோ" காபி!**



**நரசுஸ்**
**காபி கம்பெனி**
சேலம் 636 007.
கிளைகள்: தமிழ்நாடெங்கும்.

ADWAVE/NCC/1528

